

பிரபல சமையல் கலைஞர் திருமதி பிரமீளா லால் தமது விசேஷப் பக்குவ முறை ஒன்றை உங்களுக்கு உதவுகிறார்.




# ஜெல்லி க்ரிஸ்டல்ஸ்

## உபயோகித்து லெமன் ஜெல்லி மோல்டு செய்து பார்த்திருக்கிறீர்களா?

### இச்சைக் கினிய புதுமையான பழவகைச் சிற்றுண்டி!



செறிப்பான பழங்களை தரும் ரெக்ஸ் ஜெல்லியை சிறியோரும் பெரியோரும் ஒருங்கே விரும்புவார்கள். எல்லா சந்தர்ப்பங்களுக்கும் ஏற்ற பல்வேறு வகையான புட்டிங்குகளையும், புதுத் தின்பண்டங்களையும் தயாரிக்க அது உதவுகிறது. ரெக்ஸ் ஜெல்லி க்ரிஸ்டல்கள் அருமையான பொருட்களிலிருந்து சிறந்த கவனத்துடன் பக்குவப்படுத்தப்பட்டது. ஜெல்லி க்ரிஸ்டல்களுள் மிகவும் சிறந்தது ரெக்ஸ்

தேர்ந்தெடுக்க 6 இன் சுவைகள்




**பக்குவ முறை:**

- 1 பாக்கெட் ரெக்ஸ் லெமன் ஜெல்லி க்ரிஸ்டல்ஸ்
- ½ ஆரஞ்சு பழத்தின் தோல், சீவியது
- 1 ஆரஞ்சின் ரசம்
- ¼ லிட்டர் பாலேடு

1. மிகவும் சூடான ½ லிட்டர் நீரில் ரெக்ஸ் ஜெல்லி க்ரிஸ்டல்ஸை உருக வைக்கவும்.
2. ஆரஞ்சு ரசத்தையும், சீவிய பழத்தோலையும் அதில் போடவும்.
3. அப்படியே ஆற விடவும்.
4. பாலேட்டை கட்டியாகும் வரை கடைந்து, ஜெல்லி கலவையைச் சேர்த்து நன்கு கூட வைக்கவும்.
5. சிறிதே உறைந்தபின், மீண்டும் கடையவும்.
6. அச்சினுள் மாற்றி உறையும் வரை விட்டு வைக்கவும்.

தயவு செய்து எனக்கு ஒரு பக்குவ முறை சேட்டை ஆங்கிலம்/இந்தி வங்காளம்/தமிழ்/தெலுங்கு/மலையாளம்/ குஜராத்தி/ மராத்தி கன்னடத்தில் இலவசமாக அனுப்பி வைக்கவும்.

பெயர் ......................................

முகவரி ......................................

இக் கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்புக:
கார்ன் ப்ராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட், ஸ்ரீ நிவாஸ் ஹவுஸ், வாட்பி ரோடு பம்பாய்-1. (பிஆர்)

K-7

இது போல் இன்னும் பலவகையான தின்பண்டங்களைத் தயார் செய்து உங்கள் குடும்பத்தினரை மகிழ்விக்கலாம். பின் வரும் இதழ்களைக் கவனித்து வாருங்கள்

உங்கள் சமையல் உன்னதமாக இருக்க உயர்ந்த சாமான்களையே உபயோகியுங்கள்!

**கார்ன் ப்ராடக்ட்ஸ் கோ. (இந்தியா) பிரைவேட் லிட்.**
ஸ்ரீ நிவாஸ் ஹவுஸ், வாட்பி ரோடு, பம்பாய்-1. (பிஆர்)



ஏகபோக விற்பனை ஏஜண்டுகள்:
பாரி & கம்பெனி, டேர் ஹவுஸ், மதராஸ்-1
மற்றும் அவர்களது கிளைகள்

Bensons/1226 TM

# அண்ணா அமரரானார்!

தமிழன்னைக்குத் தாங்கொணாத புத்திர சோகம் ஏற்பட்டு விட்டது.

தமிழ் மக்கள் தங்கள் பேரன்புத் தலைவனை இழந்து விட்டனர்.

நல்லறிவும், விவேகமும், நிதானமும், மக்கள் நலனில் ஆழ்ந்த ஈடுபாடும் படைத்த சீரிய ஆட்சியாளரை மாநிலம் பறிகொடுத்துவிட்டது.

சொல்லின் செல்வனை, சிந்தனைச் சிற்பியை இழந்துவிட்டது இலக்கிய உலகம்.

கோடி கோடி மக்களிடம் அன்பைப் பொழியவும், கோடி கோடி மக்களின் அன்புப் பொழிவை ஏற்கவும் பாக்கியம் செய்திருந்த பொன்னான இதயம் நின்று விட்டது!

முதலமைச்சர் திரு அண்ணாதுரை அவர்கள், நலிவும் நோவும் தீண்டவொண்ணாத புகழுடம்பை எய்தி விட்டார்.

மக்கள் தங்களால் இயன்ற வரையில் அல்லும் பகலும் பிரார்த்தித்தனர்; மருத்துவர்கள் தங்களால் முடிந்த சகல சிகிச்சைகளையும் அயராமல், சலியாமல் அளித்தனர்; திரு அண்ணாதுரை அவர்களோ எண்ணற்ற பல அரசியல், சமூகப் போராட்டங்களுக்குச் சளைக்காமல் எதிர்முகம் கொடுத்த தமது தீவிரமான சங்கல்ப பலம் கொண்டு, அலை அலையாக அடுத்து அடுத்து வந்த நோயின் நெருக்கடி நிலைமைகளை எதிர்த்து உறுதியுடன் போராடினார்— கடைசியில் விதி விளையாடிவிட்டது!

அநுதாபம் தெரிவிக்கிறவர்கள், அநுதாபம் பெறுகிறவர்கள் என்ற பேதமின்றி நாடு முழுவதுமே துக்கம் அநுஷ்டிக்கும் சோக குடும்பமாகி விட்டது.

திரு அண்ணாதுரை சரித்திரத்தில் அபூர்வமாகவே காணப்படும் அற்புத மனிதர்களில் ஒருவர்.

ஒரு மாபெரும் சமூகத்தின் சிந்தனையையே பெரிதாகக் கிளறிவிட்டுப் புதுத் திசைகளில் திருப்பிய பேரறிவாற்றல் படைத்தவர் அவர். அறிஞர் அண்ணா என்றே அழைக்கப்பட்டவர்.

'அறிஞர்' என்ற அடைமொழியோடு 'அண்ணா' என்ற சகோதரத்துவப் பெயர் இணைந்தது அவரது தனிப் பெருமை. இதயம் கலந்த, உணர்ச்சி செறிந்த அரசியலே அண்ணாவின் அதிசயமான அரசியல்.

உணர்ச்சியின் தீவிரம் அதிகமாயின் அறிவின் ஆட்சி நலியும் என்பது பொது வழக்கு. அண்ணா அவர்கள் கடந்த சில ஆண்டுகளாக உணர்ச்சி வேகத்தை மேன் மேலும் அடக்கி, விவேகத்துக்கும் பகுத்தறிவுக்கும் மேன் மேலும் இடம் தந்து தமது அரசியல் கருத்துக்களைச் செப்பம் செய்து வந்ததைக் கண்டு உலகமே மகிழ்ந்து வியந்தது. திராவிட முன்னேற்றக் கழகத்தின் அடிப்படைக் கொள்கைகளிலேயே சமீப காலமாக அவர் செய்த மாபெரும் மாறுபாடுகள் — சத்தியமும், நீதியும், நியாயமும், பிரத்தியட்ச உணர்வும், நாட்டு நலனில் அக்கறையும் கொண்ட எந்தத் தலைவரும் பெருமைப்படக்கூடிய விதத்தில் அமைந்தன. பிறரை எதிர்க்கும் தீரத்தைவிட, தம் கருத்துக்களையே மாற்றிக் கொள்ளும் தீரமே பெரிது. அவ்விதத்தில் மாபெரும் தீரராகத் திகழ்ந்தவர் அண்ணா. பாரத தேசத்தின் ஐக்கியத்துக்காகப் பாடுபடுபவர் — குறுகிய பற்றுக்களுக்கு ஆளாகாதவர் — என்ற பெருமையுடன், முதலமைச்சர் பதவிக்கு வந்தார் அண்ணா. 'பதவி என்பது எவரையுமே வழிதவறி நடக்கச் செய்யும்' என்ற முதுமொழிக்கு மாறுகப் பதவிக்கு வந்தபின் அவர் காட்டிய அடக்கம் அதிசயமானது; பெரும் வாழ்த்துக்குரியது.

வாழ்த்துக்குரிய பெருவாழ்க்கை இவ்வளவு விரைவில் முடிந்துவிட்டது.

வாழ்க்கை முடிந்துவிட்டது.

ஆனால் அந்த வாழ்க்கைத் தத்துவங்கள் முடியவில்லை.

கடமையுணர்வும், கண்ணியமும், கட்டுப்பாடும், கன்னித் தமிழும், இன்தமிழ்ப் பண்பாடும், நற்றமிழ் நாடும் உள்ளவரையில் அண்ணாதுரையும் வாழ்வார்!

---

**துயரம் வாழ்க்கையில் இருந்துகொண்டேயிருக்கும். யுத்த வீரர்கள் மரணத்தைக் கண்டு குழப்பமடைய மாட்டார்கள். தைரியம் இழக்காமல் வீர வேகத்துடன் மாண்டவருடைய விருப்பம் பயன் அடையும் வழியில் தம் கடமைகளைச் செய்து கொண்டு போவார்கள். இதுவே முன்னேற்றக் கழகத்துத் தம்பிகளுக்கு என் ஆசீர்வாதம்.**

3–2–69

**கீலக தைமீ. 27 ❋ 1969 பிப்ரவரி 9உ.**







## கல்கி
பொருளடக்கம்




நீ நண்பனா,
விரோதியா?

நாசவேலைக்
காரர்கள்

PK

சவானின் தயக்கம்!



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 28 □ இதழ் 28

# நெருக்கடிக்குத் தயாராவோம்!

எல்லா நன்மக்களும் கட்சியை மறந்து, தேச மக்கள் அனைவரையும் ஒரே அமைப்பாகப் பார்க்க வேண்டிய தருணம் வந்து விட்டது.

தாங்கள் சார்ந்துள்ள கட்சியிலிருந்து லாபம் பெறுவதை விட, அந்தக் கட்சிக்குத் தமது சக்திகளை மேலும் அளித்து, கட்சியை ஆன்மிக ரீதியில் 'லாபம்' பெறச் செய்வதற்கு அனைவரும் முன்வரவேண்டிய தருணம் வந்துவிட்டது.

நீண்ட காலமாக ஆட்சி அதிகாரம் பெற்றுள்ள கட்சி எளிதில் கட்சிக்காரர்களுக்கு லாபங்கள் வழங்க முடியும். ஆனால் புதிய கட்சிகளிடமிருந்து இவ்விதம் அதிகார சக்தியோ, பொருளாதார லாபமோ பெற முடியாது. இந்த உண்மையை உணராமல் ஆளும் கட்சிக்கு எதிரான கட்சியில் சேருபவர்கள், தாம் சேரும் கட்சிக்குப் பலமூட்ட மாட்டார்கள்; மாறாக அதன் பலத்தை நலிவுறச் செய்பவரே ஆவர்.

நம் நாட்டு அரசியலிலும், பொருளாதாரத்திலும் நெருக்கடி நிலைமை நுரைத்துப் பொங்குகிறது. கடன் வாங்கிய பணத்தைக் கொண்டும், வாசாலகமான பேச்சைக் கொண்டும் இதை மூடி மறைக்க முயற்சி நடக்கிறது. ஆயினும் முன்கூட்டியே நாம் விபரீதத்தைச் சமாளிக்கத் தயார் செய்து கொள்ளாவிடில் ஒருநாள் எரிமலை வெடித்தேயாக வேண்டும்.

ஆளும் கட்சியையும், அதன் கொள்கைகளையும் எதிர்த்து, அவற்றை அப்புறப்படுத்துவதற்காக எதிர்க் கட்சிகளையெல்லாம் ஒன்று சேர்க்கும் முயற்சி மனப்பூர்வமாகவும், இடை விடாமலும் பல தடவைகளில் மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. ஆனால் இம்முயற்சிகள் தோல்வியே கண்டுள்ளன. இதற்குக் காரணம், ஒவ்வொரு கட்சியும் தனது தனி உருவத்தை அபிவிருத்தி செய்துகொண்டு முன்னேற விரும்புவதேயாகும். எதிர்க் கட்சிகளில் உள்ள மாறுபாடுகள் நீங்காமல் நீடிக்கின்றன. இவ்வாறு எதிர்க் கட்சிகள் ஒன்று சேராததால் ஆள்கிற கட்சிக்கு ஆதாயமாகிறது.

'பிரித்து ஆளுவது' என்று சொல்வார்கள். பழைய பிரிட்டிஷ் ஆட்சி இவ்வாறு பல பிரிவுகளை உண்டாக்கி ஆண்டதாலேயே சுதந்திரப் போராட்டத்தை எதிர்க்க முடிந்தது என்பார்கள். ஆயினும் யோசித்துப் பார்த்தால் இந்தக் குற்றச்சாட்டு நியாயமாகத் தோன்றவில்லை. நாம் பிரிந்திருந்ததாலேயேதான் பிரிட்டன் நம்மை ஆள முடிந்ததே ஒழிய, நம்மைப் பிரித்ததே அவர்கள்தான் என்று சொல்வதற்கில்லை. சுதந்திரத்துக்குப் பின் இன்றும் இதே கதை வேறு ரூபத்தில் நடந்து வருகிறது. இன்று கட்சிகள் பலவாகப் பிரிந்திருப்பதால்தான்—கட்சிகளை ஒன்று சேர்க்க வேண்டியவர்கள் அவ்வாறு செய்யாமல் பிரிவுகளைக் காப்பாற்றுவதால்தான் — காங்கிரஸ் ஆள முடிகிறது. காங்கிரஸ்தான் நம்மைப் பிரித்து ஆளுகிறது என்று சொல்வதற்கில்லை.

விபரீதம் ஏற்படும்போது ஆட்சி ஏற்க வேண்டிய ஒரே கட்சி சுதந்திரக் கட்சிதான். ஆனால் இதற்கு அது முன்கூட்டியே தன்னைத் தயார்ப்படுத்திக்கொள்ள வேண்டும். அதாவது, நெருக்கடி காலத்தில் மேற்கொள்ள வேண்டிய அத்தியாவசிய நடைமுறைகளை அது வகுக்க வேண்டும். எல்லா நன்மக்களும், அறிவு வாய்ந்த மக்களும் ஒப்பக் கூடிய விதத்தில் மிகக் குறைந்த அம்சங்கள் உள்ள அதமபட்சத் திட்டமாக இதனை வகுக்க வேண்டும். இதற்கு நன்மக்களுடைய, அறிவாளிகளுடைய ஒப்புதலையும் உதவியையும் பெற வேண்டும். தனி உருவத்துடன் நிர்வகிக்கப்பட்டு வரும் பல கட்சிகளை இணைத்து, ஐக்கிய முன்னணி அமைக்கும் வீணான முயற்சிக்குப் பதிலாக, இவ்வாறு அதமபட்ச நெருக்கடி காலத் திட்டம் தீட்டி அதற்கு ஆதரவு பெறுவதிலேயே சுதந்திரக்கட்சி சிந்தனை செலுத்த வேண்டும்.

நெருங்கி வரும் விபரீதத்திலிருந்து நாட்டைக் காப்பதற்கு நெருக்கடி காலத் திட்டம் தீட்டுவதை விட, தத்தம் பலத்தைப் பெருக்கிக் கொள்வ

திலேயே இன்று கட்சிகள் யாவும் கருத்துச் செலுத்தி வருகின்றன. இந்நிலையில் மற்றவர்களை எதிர்பாராமல், சுதந்திரக் கட்சி இத் திசையில் முதலடி எடுத்து வைக்க வேண்டும். அத்துடன் இந்த அதமபட்ச நெருக்கடித் திட்டத்தில் யாரும் சேருவதற்கு வசதியாகக் கதவைத் திறந்து வைத்திருக்க வேண்டும்.

நல் ஒழுக்கம், நல்லாட்சி, திவாலா நிலையைக் கடக்க உதவும் பொருளாதாரச் சீர்திருத்தம், எந்த உருவத்திலும் கம்யூனிஸம் நாட்டை விழுங்கிவிட அனுமதியாமல் எதிர்த்து நிற்பது — இவையே நெருக்கடி காலத் திட்டத்தின் ஜீவாம்சங்கள். சிந்தனைத் தெளிவு வாய்ந்த சுதந்திரக் கட்சித் தலைவர்களில் ஒரு சிலரைத் தேர்வுசெய்து, அவர்களைக் கொண்டு, திட்டத்தின் அம்சங்களை விரிவாக வகுத்துக் கொள்ள வேண்டும்.

(ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது)

# என்ன சேதி?

## ருசிக்காத உண்மை

ஹிந்தி பேசும் மக்களிடையே சென்று, ஹிந்தி வெறியர்கள் செய்த காரியம் தவறு என்று கூறத் தனியானதோர் தைரியமும் துணிச்சலும் வேண்டும். அதுவும் ஹிந்தி பேசும் மக்களின் வோட்டுக்களைக் கேட்கச் சென்றவிடத்தில், அவர்களுக்கு ருசிக்க முடியாத ஓர் உண்மையை விண்டு ஒருவர் உரைக்கிறார் என்றால், அவரைப் பாராட்டத்தான் வேண்டும். இடது சாரி கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் கேரள முதன் மந்திரி திரு ஈ. எம். எஸ். நம்பூதிரி பாடு அவர்கள் இத்தகைய துணிச்சலான காரியம் செய்து நமது பாராட்டுக்களைப் பெற்றிருக்கிறார். கம்யூனிஸ்ட் கட்சியுடன் கொள்கையளவில் நமக்கு எவ்வளவோ வேறுபாடிருப்பினும், ஆட்சி மொழி விஷயத்தில் திரு ஈ. எம். எஸ். தென்னகத்தாரின் நிலையைப் பஞ்சாப் மாகாணமாகிய ஜலந்தரில் விளக்கியதோடு ஹிந்தி வெறியர்களை எச்சரித்து விட்டும் வந்திருப்பது ஆறுதலாக இருக்கிறது.

## பிரார்த்தனைக் கூட்டம்

கிறிஸ்து சமயத்தில் கத்தோலிக்கர், பிராடெஸ்டெண்ட் ஆகிய பல்வேறு பிரிவினரும் சேர்ந்து காந்தி நினைவுநாளன்று சென்னையில் ஒரு பிரார்த்தனைக் கூட்டம் நடத்தினார்கள். ராஜாஜி, மௌலானா பொக்காரி, பூஜ்யர் அடைக்கலம், டாக்டர் சந்திரன் தேவநேசன் ஆகியோர் அந்தப் பிரார்த்தனையில் கலந்து கொண்டு சொற்பொழிவாற்றினார்கள். மௌலானா பொக்காரி அவர்கள் முஸ்லிம் சமுதாயத்தினர் இந்தியாவில் அமைதியாக வாழ வேண்டும் என்பதற்காக உயிர் நீத்த மகான் காந்தி என்று நன்றியுணர்ச்சியுடன் குறிப்பிட்டார். காந்தி மகான் மறைந்தபின் இவ்விருபது ஆண்டுகளில் அவர் வற்புறுத்தி வந்ததையெல்லாம் மறந்து விட்டோம். இதற்கெல்லாம் மூலகாரணம் டம்பாச்சாரித் திட்டங்கள்தான் என்றார் ராஜாஜி, மிகுந்த வருத்தத்தோடு.

இந்தப் பிரார்த்தனைக் கூட்டத்துக்குக் காரணபுருஷர், சென்னை பிஷப் புனித டாக்டர் லெஸ்லி நியூபிகின் அவர்கள் ஆவார்.

## மகாத்மாவின் மணிமொழி

மதத்திலிருந்து அரசியலைத் துண்டித்து விட்டால், அதன்பின் அரசியலுக்குப் பொருளேயில்லை. அரசியல் என்பது நம் வாழ்வில் ஓர் அங்கம். எனவே, நம் தேசிய அமைப்புக்கள் பற்றி நாம் அறிய வேண்டியதே. குழந்தைப் பருவத்திலிருந்தே இதைச் செய்யலாம். ஆயினும் நமக்கு மத நம்பிக்கை என்ற பொய்யாத, சலனமற்ற ஒளியும் தேவை. அறிவை மட்டும் சார்ந்த நம்பிக்கை போதாது. நம் இதயத்திலேயே அழிக்கமுடியாமல் எழுதப்படும் நம்பிக்கை வேண்டும். நமது மத உணர்வை நாமே முதலில் புரிந்து கொள்ள வேண்டும். இதைச் செய்த மாத்திரத்தில், வாழ்க்கையின் சகல துறைகளும் நமக்கு வெட்டவெளிச்சமாகின்றன. அப்போதுதான் (அரசியல் உட்பட்ட) வாழ்க்கைப் போராட்டத்தை ஏற்றுப் போரிடுவதற்கான ஆயுதங்கள் நமக்குக் கிடைக்கின்றன. இளைஞர்களுக்கு இவ்வுணர்வை ஏற்படுத்துவது நம் புனித கடமை. ஆனால் இன்று நடப்பது என்னவென்றால், நாட்டு அரசியல் வாழ்க்கையில் பெரும் பகுதி பட்டுமே இளைஞர்களுக்கு உரியதாக உள்ளது. படிப்பு முடிந்தவுடன், அவர்கள் அரசியலை முற்றிலும் மறந்து, ஆண்டவனைப் பற்றியும் ஏதும் அறியாதவர்களாக, நீசமான உத்தியோகங்களை நாடி ஓடுகின்றனர். அவர்களுக்கு ஆண்டவன் இல்லை; அதாவது ஜீவசக்தி நிறைந்த காற்று இல்லை, பிரகாசமான ஒளி இல்லை, சக்தி வாய்ந்த உண்மைச் சுதந்திரமுமில்லை.





# அன்புச் சக்தி வெல்லட்டும்!

இவ்விதழ் அச்சேறும்போது அன்புக்குரிய அண்ணாதுரை அவர்கள் மிகவும் கவலைக்கிடமான நிலையில் இருந்து ஓரளவு தேறி, நாடித் துடிப்பு, சுவாசம் முதலியவற்றில் முன்னேற்றம்கண்டு வருவதாக வெகு நல்ல செய்தி கிடைத்திருக்கிறது. நாடெங்கிலும் எண்ணற்ற மக்களுக்கு வயிற்றில் பாலை வார்த்தது போன்ற மகத்தான மகிழ்ச்சிச் செய்தி இது. திரு அண்ணாதுரையைக் கண்ணுகக் கருதிக் காத்து வரும் வைத்திய நிபுணர்களை யெல்லாம் வாழ்த்துகிறோம். எத்தனையோ அரசியல் போராட்டங்களுக்குச் சலியாமல் முகம் கொடுத்து வந்துள்ள திரு அண்ணாதுரையின் சங்கற்ப பலம் நமனை எதிர்த்தும் செய்கிற போராட்டம் வெற்றி பெற வேண்டும் என வாழ்த்துகிறோம்.

கடந்த ஒருவார காலமாகக் கோடானு கோடி மக்கள் தத்தளித்து வந்திருக்கின்றனர். திரு அண்ணாதுரை என்கிற ஒரு வியக்தியின் ஊசலாடும் உயிரோடு அன்புச் சக்தியால் பிணைக்கப்பட்ட கோடானு கோடி மக்கள் துடிதுடித்து வந்திருக்கின்றனர். அவ்வப்போது அவர் சிறிது குணமாகிற அறிகுறிகள் காணும்போது மக்களுக்குப் பேருவகை பெருக்கெடுக்கிறது. அவர் மீண்டும் நெருக்கடி நிலை அடையும்போது அத்தனை நெஞ்சங்களும் நோகின்றன. மகத்தான மனச் சஞ்சலம் ஏற்பட்டுள்ள வேளையிலும், அந்த அன்பு வெள்ளத்தின் சக்தியை எண்ணி வியக்காமலிருக்க முடியவில்லை. இத்தனை அன்பு வெள்ளத்துக்கும் ஊற்றுக் கண்ணுக உள்ள அந்த ஓர் அற்புத வியக்தியை எண்ணி வியக்காமலிருக்க முடியவில்லை.

இப்போது கிடைத்துள்ள நற்செய்தி மேன்மேலும் தொடர்ந்து நற்செய்திகளைத் தர வேண்டும் என்பதொன்றே தற்போது சகல மக்களும் விரும்புவதும் பிரார்த்திப்பதுமாகும். ஈசுவர லீலையை அறிவார் யாருமில்லை. எனினும், நமது மாநில கவர்னர் அவர்கள் பணித்துள்ளபடி, அவனைப் பிரார்த்தித்துக் கொண்டே இருக்க வேண்டியது நமது கடமை. திரு அண்ணாதுரை அவர்களின் நலன் ஒன்றே சிந்தையாகக் கொண்டுள்ள நம் அனைவரின் விருப்பத்தையும் பிரார்த்தனையையும் ஆண்டவன் நிறைவேற்றுவான் என்ற நம்பிக்கையை விடாமல் பற்றிக் கொண்டிருப்போமாக!

# GRASIM

## STAPLE FIBRE A SUPPLEMENT TO COTTON AND OTHER FIBRES



**Among Indian technological achievements Gwalior Rayon's success in producing Rayon Grade Pulp from indigenous raw materials without any foreign aid or collaboration has, perhaps, been the most remarkable.** The staple fibre produced from the pulp has been a boon to the hard-pressed textile industry which was deprived of valuable raw materials when vast areas of cotton-growing land were lost to Pakistan as a result of Partition.

Grasim Staple Fibre is unique in many respects, and is, in effect, a supplement to all natural fibres including cotton, wool, silk, jute, as well as to synthetic fibres. When blended or mixed with other fibres, it increases the usefulness of the resultant fabrics, making them cooler, softer, and more comfortable while at the same time helping to lower costs.

Today Gwalior Rayon contributes substantially to the national economy. It keeps hundreds of textile mills busy, gives employment to thousands of people, helps clothe lakhs more, saves crores of rupees in foreign exchange, contributes handsomely and in ever-increasing amounts to the national exchequer—these are just a few of the calculable benefits.

Besides Rayon Grade Pulp and Staple Fibre, Gwalior Rayon also produces high quality fabrics and fabricates its own machinery and equipment.

As the needs of the nation for the basic necessities of life are constantly growing, Gwalior Rayon, conscious of its responsibilities, has already made plans to expand its production. It is the constant endeavour of the Company to serve the country to its utmost ability.

**THE GWALIOR RAYON SILK MANUFACTURING (WVG.) CO. LTD.**

Birlagram, Nagda

# ராஜாஜியின் கருத்துக்கள்

வட இந்தியாவில் நான்கு ராஜ்யங்களில் நடக்கவிருக்கும் இடைத் தேர்தல்களின் விளைவாக, காங்கிரஸ் கட்சி ஆணவத்துடனும் பிடிவாதத்துடனும் நடந்து கொள்ள இயலாத அளவுக்கேனும் அதன் பெரும்பான்மை பலம் குறைக்கப்படும் என நம்புவோமாக. அடக்கத்துடனும் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையுடனும் அது எதிர்க்கட்சிகளுடன் நடந்து கொள்ள வேண்டிய நிலை ஏற்படும் என நம்புவோம். இந்நிலை ஏற்படாவிடில் தேசம் திவாலா நிலைக்கு மேலும் நெருக்கமாக இட்டுச் செல்லப்படும்.

தில்லியில் ஆட்சியில் உள்ள காங்கிரஸ், 'ஸ்திரத்தன்மையுள்ள அரசாங்கம் வேண்டும்' என்கிற வாதத்தை விடுத்துப் பகுத்தறிவையும் நாட்டு நலனையும் நாடுமாறு செய்ய வேண்டும். காங்கிரஸை இவ்வாறு நினைக்கச் செய்யும் நிலையை எதிர்க் கட்சிகள் தோற்றுவித்தால்தான் எதிர்காலத்தில் நம்பிக்கை வைக்கலாம். 'ஸ்திரத் தன்மை' என்பது காங்கிரஸ் சாதியை அபிவிருத்தி செய்து, நிலைநாட்டுவதற்காக மட்டுமே சொல்லப்படும் ஏமாற்று வாதம்.

மேற்கு வங்கத்தில் கம்யூனிஸ்டுகளுக்கும் காங்கிரஸ்காரர்களுக்கும் இடையே நடக்கும் தேர்தல் போட்டியில் யாரை ஆதரிப்பது என்பது பிரச்னை. இருவரும் வேண்டாம் என்று,வோட்டே போடாமல் இருப்பது நிலைமையைச் சீர்திருத்தாது. கம்யூனிஸ்ட் வேட்பாளருக்கு வோட் செய்வதற்கில்லை என்பது வெளிப்படை. தில்லியில் ஆளுகையில் உள்ள காங்கிரஸை எதிர்த்து வேறெந்தக் கட்சிக்காயினும் வோட் போட வேண்டும். வேறெந்தக் கட்சிக்கும் மத்திய சர்க்கார் கடிவாளத்தைத் தன் கைக்குள் கொண்டு வருகிற வாய்ப்பில்லை. எனினும் அதற்கு வோட் செய்வதால் காங்கிரஸின் பலத்தைக் குறைக்க உதவியதாகும். காங்கிரஸின் பலத்தைக் குறைப்பதே உடனடி லட்சியம். கம்யூனிஸ்ட் வேட்பாளருக்கு வோட் போடக்கூடாது. எனினும் அக்கட்சியின் ஆதரவு பெற்ற வேட்பாளருக்கு வோட் போடக்கூடாது என்பதில்லை.

'சர்க்காரின் ஸ்திரத் தன்மை' என்ற வாதத்தைக் காட்டி, அதன் மூலம் தங்கள் அதிகாரத்தை நிலைநாட்டிக் கொள்ள விரும்புகிறார்கள். ஆனால் ஜனநாயக சாரமே, சர்க்காரானது மாற்றக் கூடியதாக இருப்பதுதான்! இந்தச் சாராம்சத்தின் சின்னம் தான் அவ்வப்போது சட்டசபைகளில் கொண்டு வரப்படும் நம்பிக்கையில்லாத் தீர்மானம்.

நல்ல மன்னர்களுக்கும், அவர்களது பிரஜைகளுக்கும் பாரம்பரியம் என்ற முறிவு படாத ஆட்சி முறை அநுகூலமாக அமைந்துள்ளது. ஜனநாயகத்தால் உண்டாக்கப்படும் 'மன்னர்கள்' நல்லாட்சியின் மூலமே அதிகாரத்தை நீடித்துக் கொள்ள முடியும். அல்லது, காங்கிரஸ் கட்சி நம் நாட்டில் செய்வதுபோல், தேசப் பொருளாதாரத்தின் மீது அரசாங்கத்துக்குச் சட்ட விரோதமான ஆதிக்கத்தை ஏற்படுத்துவதால், ஜனநாயக 'மன்னர்'களின் அதிகாரம் நீடிக்கும்.

★

நாகரிகம் என்கிற பெயரில் செய்கிற காரியங்களால், ஆலைத் தொழில் மயமாகிவிட்ட நகரங்களிலேயே வேலை வாய்ப்புக்கள் ஏற்படுகின்றன. இதன் இயற்கையான விளைவாகக் கிராம மக்கள் பெருமளவில் நகரங்களுக்குப் பெயர்கின்றனர். வேலை பெறும் சிலரும், வேலைக்காகக் காத்துக் கிடக்கும் பலரும் நகரங்களில் கிடைக்கும் சிறிது இடத்திலேயே வாழ வேண்டியதாகிறது. இதனாலேயே சேரிகள் ஏற்படுகின்றன. தவிர்க்க முடியாமல் ஏற்படும் சேரிகளை ஒழிக்க முயலுவது வியர்த்தமே. இம்மாதிரி நகரங்கள் தோன்றிப் பெருகிக்கொண்டே யிருப்பதால், அவற்றுக்காக நகரசபையினர் வருமானத்தைக் காட்டிலும் வெகு அதிகமாகச் செலவழிக்க வேண்டி யிருக்கிறது.

உலகின் தலைசிறந்த நாகரிக ஸ்தலமான நியூயார்க்கின் உதாரணத்தைப் பார்ப்போம்: அந்நகரில் கல்விக்காக ஆகும் செலவு 127 கோடி டாலருக்கும் அதிகமாகும். இதில் நகராட்சி 35 சதவிகிதம் செலவழிக்கிறது. நியூயார்க் ராஜ்யம் 57சதம் செலவழிக்கிறது. அமெரிக்க அரசாங்கம் மீதியுள்ள 8 சதம் செலவை மேற்கொள்கிறது. பொது நலனுக்காக அந்நகரத்துக்கு ஏற்படும் 135 கோடி டாலர் செலவில் நியூயார்க் மாநகராட்சி 28 சதமும், ராஜ்யம் 32 சதமும், அமெரிக்க சர்க்கார் 40 சதமும் ஏற்கின்றன. அமெரிக்க சர்க்கார் இன்னும் அதிக நிதி உதவாத பட்சத்தில் நகரங்கள் நிறைந்த ராஜ்யங்களும், அவற்றிலுள்ள நகரங்களும் நாசமடைய வேண்டியிருக்கும் என்கிறார் கவர்னர் ராக்ஃபெல்லர். இந்தியாவில் நியூயார்க் போல் இத்தனை பெரும் செலவு ஏற்படாது என்பது வாஸ்தவம். ஆயினும், நகரங்களிலேயே வேலை வாய்ப்பைப் பெருக்கும் நம் நாட்டில் எந்த நிலை ஏற்படும் என்பதற்கு இதிலிருந்து படிப்பினை பெறுவோமாக.

★

மக்களை இணைக்கிற ஒரு சங்கிலியே மொழி. ஆனால் இணைப்புக்கு இது ஒன்று மட்டுமே சங்கிலியல்ல. நீண்ட காலமாகப் பிரிந்திருந்தவர்களை இணைக்க மொழி மட்டும் போதாது.

முதலில், தாங்கள் பெரிதாக இருக்க வேண்டும் என்கிற விருப்பத்தில் ஒரு மொழிக்காரர்கள் யாவரும் ஒரு ராஜ்யமாக இணைகின்றனர். இப்படித்தான் மலையாளம் பேசுபவர்கள், கன்னட மொழிக்காரர்கள், தெலுங்கர்கள் ஆகியோர் தனித் தனி ராஜ்யமாக ஒன்று சேர்ந்துள்ளனர். ஆனால் மக்களைப் பிரிக்கின்ற சக்திகள் விரைவிலேயே செயல்பட ஆரம்பிக்கின்றன. மொழி ஒற்றுமையை மீறி இது செயலாகிறது. இதையடுத்து, முதலில் எதிர்பார்த்தது போல் ஒரு ராஜ்யத்தின் பல பகுதிகளும்

இறுக்கமாக இணைவது சிரமம் என்பது வெளியாகத் தொடங்குகிறது.

தெலிங்கானு கிளர்ச்சி பற்றி நிறையச் செய்திகள் பார்த்து வருகிறோம். மானுட விவகாரங்களில் கசப்பும் இனிப்பும் கலந்து காண்கின்றன. நாம் கசப்பையும் இனிப்புடன் சேர்த்து ஏற்றுக் கொள்ள வேண்டும். அநுபவம் காட்டும் பெரிய படிப்பினை யாதெனில்: அவசரப்படக் கூடாது. அதிகமாக எதிர்பார்க்கக் கூடாது; விவகாரங்களை அவற்றின் உண்மையான உருவத்தில் ஏற்றால் யாவும் நலமாக முடியும்.

★

சிதைந்து விழுந்திருந்த மேற்கு ஜெர்மனி, அதன் இடிபாடுகளிலிருந்து இருபதாண்டுகளுக்கு முன் மீண்டும் உயிர்த்தெழத் தொடங்கியது. அப்போது அது பூகோள ரீதியில் துண்டாடப்பட்ட ஒரு விசித்திர நாடு. ருஷியாவின் ஆளுகைக்கு உட்பட்டிருந்த கிழக்கு ஜெர்மனியிலிருந்து வெளியேறியவர்களும் வெளியேற்றப்பட்டவர்களுமாக ஏராளமான அகதிகள் மேற்கு ஜெர்மனிக்கு வந்து அதன் மக்கட் தொகையை அதிகமாக்கினர். எனினும், 'பொருளாதார அற்புதம்' என்று கூறப்படும் நிகழ்ச்சியால், இப்போது மேற்கு ஜெர்மனி சர்வதேச ரீதியில் வளர்ச்சியுற்று, உலகின் ஏற்றுமதி நாடுகளில் இரண்டாவது ஸ்தானமும், தொழில் வளம் பெருகிய நாடுகளில் மூன்றாவது ஸ்தானமும் வகிக்கிறது.

'மகத்தான கூட்டு சர்க்கார்' என்று கூறப்படும் ஏற்பாட்டின் கீழ் ஆளும் கட்சியும் எதிர்க் கட்சியுமாக ஒன்று கூடி இரண்டே ஆண்டுகளில் ஜெர்மனியின் பெரும் பொருளாதாரச் சுணக்கத்தைக் கடந்துள்ளனர்.

பொருளாதாரத்தில் மேற்கு ஜெர்மனி மகா பலசாலியாக ஓங்கி நின்றாலும், அரசியல் ரீதியில் அது வாமனனாகவே உள்ளதாகச் சொல்லப்படுகிறது. பூகோளத்தில் அது அமைக்கப் பட்டுள்ள சூழலை மாற்றுவதற்கு அதனாலும் முடியாது. வல்லரசுகளாலும் முடியாது.

அதிகாரங்களை ஓரிடத்திலேயே குவிக்காமல், பரவலாக்குகிற முறையை மேற்கு ஜெர்மனி மேற்கொள்ளாததே அதன் பலவீனத்துக்குக் காரணம் என்று கூறப்படுகிறது.

★

அமெரிக்காவில் ஸியாட்டிலிலிருந்து கெட்ட செய்தி வந்திருக்கிறது. நீக்ரோ உரிமைகளுக்காகப் போராடும் 38 வயதான எட்வின் ப்ராட் தமது இல்லத்தில் சுட்டுக் கொல்லப்பட்டிருக்கிறார். வீட்டுக்கு முன் அவர் நிற்கையில் இரு வாலிபர்கள் அவரைச் சுட்டு விட்டுத் தப்பி ஓடியிருக்கின்றனர். அப்போது ஸ்ரீமதி ப்ராட் மாடி ஜன்னலிலிருந்து தமது கணவர் கொலை செய்யப்படுவதை அவலமாகப் பார்த்துக் கொண்டிருந்தாராம்.

## விருதுபெற்ற வித்தகர்கள்

வழக்கம்போல் இந்த ஆண்டும், தேசமெங்கிலும் உள்ள பலதுறைப் பிரமுகர்கள் 89 பேர் குடியரசுத் திருநாளை யொட்டி கௌரவிக்கப் பட்டிருக்கின்றனர். பத்மவிபூஷண், பத்மபூஷண், பத்மஸ்ரீ முதலிய விருதுகளைப் பெற்ற அத்தனை பேருக்கும் நம் பாராட்டுக்கள் உரியதாகும்.

முக்கியமாகச் சென்ற ஆண்டு விஞ்ஞான ஆராய்ச்சிக்காக நோபெல் பரிசு பெற்ற டாக்டர் ஹர கோவிந்த கோரானா அவர்களுக்கு **பத்ம விபூஷண்** என்ற உயர்ந்த விருதை ராஷ்டிரபதி வழங்கி யிருப்பது தேச மக்கள் அனைவருக்கும் மகிழ்ச்சியூட்டுவதாகும்.



விருதுகள் பெற்ற வேறு சில பிரமுகர்களை எதிர்ப் பக்கத்தில் காணலாம்.

### பத்மபூஷண்

சினிமாத் துறையிலும் பத்திரிகை உலகிலும் தமக்கென ஒப்பற்ற இடத்தை ஏற்படுத்திக் கொண்டுள்ள திரு எஸ். எஸ். வாஸன். பாரத நாட்டின் பல்வேறு இசைகளிலும் மேனாட்டு இசையிலும் நல்ல ஞானம் பெற்ற டாக்டர் வி. கே. நாராயண மேனன். கர்நாடக இசைச் செம்மல் செம்மங்குடி சீனிவாசய்யர். ஸாகித்திய அகாடமியின் செயலாளராக இருந்து அரும் பணியாற்றி வரும் திரு கிருஷ்ண கிருபளானி. குயிலின் குரலினிமை படைத்த ஸ்ரீமதி லதா மங்கேஷ்கர். நடிப்புத் துறையில் தமக்கென ஒரு தனி இடத்தை ஏற்படுத்திக் கொண்ட திரு பிருத்வி ராஜ்கபூர்.

### பத்மஸ்ரீ

கல்வித் துறையில் மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் அரும் பணி புரியும் எஸ். நடராஜன். சைவ சித்தாந்த நூல் பதிப்புக் கழகத்தின் ஜீவநாடியாகச் சென்ற முப்பது ஆண்டுகளுக்கு மேலாகப் பணி புரிந்து வரும் திரு வ. சுப்பையா பிள்ளை. தமிழகத் தொழில் பிரமுகர் ஹாஜா ஷெரிப். பம்பாய் ஷண்முகானந்தா சபையை உருவாக்கிய பேராசிரியர் டி. வி. ராமானுஜம். சிறந்த கிரிக்கெட் ஆட்டக்காரர் போர்டே. வடநாட்டு சங்கீத டைரக்டர் எஸ்.டி. பர்மன். திரை உலகத்தில் பாவ பூர்வமான நடிப்பின் மூலம் பாராட்டைப்பெற்ற ஸ்ரீமதி பி. சரோஜாதேவி.

# மருத்துவத் துறையில் ஒரு மர்மக் கதை!

புற்றுநோய் எனப்படும் 'கான்ஸர்' பற்றி ஒரு பிரபல அறுவைச் சிகிச்சை நிபுணரின் கருத்துக்கள்.

**கேள்வி:** புற்றுநோய் சிறுவர்களைப் பிடிப்பதுண்டா? எந்த வயதினர் அதிகமாக இந்த நோய்க்கு இலக்காகின்றனர் ?

பதில்: சிறுவர்களுக்கு அநேகமாகப் புற்றுநோய் வருவதே இல்லை. நாற்பது வயதுக்கு மேற்பட்டவர்களிடமே இந்நோய் தோன்றுகிறது.

**கேள்வி:** இது பரம்பரை வியாதியா? அதாவது, தந்தைக்குப் புற்றுநோய் இருந்தால், அது மகனுக்கும் வருமா ?

பதில்: வரலாம். இன்னும் சற்று விளக்கமாகச் சொன்னால், ஒருவருக்கு 50 வயதில் புற்றுநோய் வந்தால், அவரது மகனுக்கு 40 வயதிலும், பேரனுக்கு 30 வயதிலும் வரக்கூடும்.

**கேள்வி:** புற்றுநோய் ஒரு தொற்று நோயா? காற்று, நீர் இவற்றால் பரவக்கூடிய நோயா?

பதில்: அன்று. கிருமிகளால் ஏற்படும் வியாதி என்று நிரூபணம் செய்யப்படவில்லை. கான்ஸர் கிருமிகள் என்று இதுவரை இனம் பிரித்துக் கண்டறியப்படவில்லை.

**கேள்வி:** பின் எப்படித்தான் இந்த நோய் தோன்றுகிறது ?

பதில்: அதுதான் இன்னும் மர்மமாகவே இருக்கிறது. எனினும் உலகின் பல பகுதிகளிலும் நடைபெறும் விரிவான ஆராய்ச்சிகளின் பயனாக, புற்றுநோய் தோன்றுவதற்குத் துணையாக அமையும் சூழ்நிலை பற்றி ஓரளவு தெரிய வருகிறது. உதாரணமாக, மிகுதியாகப் புகையிலை உபயோகிப்பவர்களுக்குப் புற்றுநோய் வரக்கூடும். வெற்றிலையோடு புகையிலை போடுகிறவர்களுக்கு வாயிலும், சிகரெட் பிடிப்பவர்களுக்கு நுரையீரலிலும் இந்நோய் காணலாம். உடலின் ஒரு குறிப்பிட்ட பாகத்தில் மிகுதியாக எரிச்சல் (Irritation) ஏற்படுவதுதான் காரணம்.

**கேள்வி:** சிகரெட் பிடிப்பவர்கள் எல்லோருக்குமே புற்றுநோய் வருவதில்லையே? கிராமங்களில் புகையிலை போடும் பழக்கமுள்ளவர்கள் ஏராளம். அவர்கள் அனைவருக்குமே புற்றுநோய் வந்து விடுகிறதா, என்ன ?

பதில்: நல்ல கேள்விதான். ஆனால், உங்கள் கேள்வியையே மாற்றி அமைத்தால் ஓர் உண்மை தெரிய வரும். புற்றுநோய்க்கு இலக்கானவர்களைப் பரிசோதிக்கையில் அவர்களது பழக்க வழக்கங்களையும் விசாரிக்கிறோம், இல்லையா? அவர்களில் பெரும்பாலோர் புகையிலைப் பழக்கமுள்ளவர்களாக இருப்பது தெரிய வருகிறது. எனவே, புற்றுநோய் தோன்றப் புகையிலை துணை புரிகிறது என்று உறுதியாக நம்ப இடம் இருக்கிறது. புகையிலை என்றால், அதிலுள்ள 'நிக்கோடின்'. இம்முடிவை யொட்டி மேலும் ஆராய்ச்சிகள் நிகழ்கின்றன. புகையிலைப் பழக்கம் இல்லாதவர்களுக்கும் புற்றுநோய் வரலாம்.

**கேள்வி:** புற்றுநோய் காண்பவர்களுள் ஆண்கள் அதிகமா, பெண்கள் அதிகமா ?

பதில்: பெண்கள் தாம். ஆண்களுக்குப் பல்வேறு உறுப்புக்களில் புற்றுநோய் ஏற்படும். ஆனால், மகளிர்களுக்குப் பெரும்பாலும் மார்பகத்திலும் ஜனன உறுப்புக்களிலுமே புற்றுநோய் தோன்றுகிறது.

**கேள்வி:** குழந்தைக்குப் பால் ஊட்டுவதால் பெண்களின் மார்பகத்தில் புற்றுநோய் ஏற்படுகிறதா ?

பதில்: அதுதான் இல்லை. இயற்கை அளிக்கும் பாதுகாப்பினைப் பாருங்கள். ஆறு, ஏழு குழந்தைகளைப் பெற்ற தாய்மார்களுக்குப் புற்றுநோய் வருவதில்லை. ஆனால், மணமாகியும் குழந்தை பெறாத பெண்களுக்கும், மணமாகாத பெண்டிர்க்கும் புற்றுநோய் வந்துவிடுகிறது! பெற்ற குழந்தைக்குத்

புற்றுநோய் வியாதியை ஒழிக்க கோபால்ட்-60 சிகிச்சை நடக்கிறது. இந்தச் சிகிச்சையினால் சருமத்துக்குத் தீங்கு நேராது. ஆனால் புற்றுநோய் 'செல்'களை அழித்துவிடும். அமெரிக்காவில் பால்டிமோர் ஜான்ஹாப்கின்ஸ் வைத்தியசாலையில் படத்தில் நீங்கள் காணும் சிகிச்சைக் கருவி உள்ளது.



படம்: புதுதில்லி விமான நிலையத்தில் ஸ்ரீமதி காரெட்டா கிங்குக்கு வரவேற்பு.

●

எத்தனையோ பேர்களைப்போல் காந்தியைப்பற்றி நானும் கேள்விப்பட்டதுண்டு. எனினும் காந்தியத்தை ஆழ்ந்து கற்றதில்லை. ஆனால் படிக்க ஆரம்பித்த பிறகு, படிக்கப் படிக்க அவரது அஹிம்சைப் போராட்டங்களால் நான் பெரிதும் கவரப்பட்டேன். சத்யாக்கிரஹம் என்ற தத்துவம் எனக்குப் பெரும் முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாகியது. காந்தியத்தை இன்னும் ஆழ்ந்து பயின்ற போது, அன்பின் சக்தி குறித்து நான் கொண்டிருந்த அவநம்பிக்கை படிப்படியாக மறைந்தது சமூகச் சீர்திருத்தத் துறையில் அன்பின் சக்தியை முதன் முறையாக உணரத் தொடங்கினேன். சமூகச் சீர்திருத்தத்துக்கும் மக்கட் சமுதாயத்தின் மனமாற்றத்துக்கும் உதவும் சக்தி வாய்ந்த உபகரணமாக அன்பு காந்திக்குப் பயன்பட்டது. சமூகச் சீர்திருத்தத்துக்கு உதவ எத்தனையோ பல மாதங்களாக நான் தேடிக் கொண்டிருந்த வழியை காந்தியத்தின் அன்பு - அஹிம்சை என்ற தத்துவத்தில் நான் கண்டுபிடித்தேன்.






— மார்டின் லூதர் கிங், 1958

---

தாய் பாலூட்டுவது இயற்கை நியதி. இந்த நியதியை யொட்டி, குழந்தைகளுக்குப் பாலூட்டும் தாய்மார்களுக்கு இந்த நோய் வருவதில்லை. இயற்கைக்கு மாறாக உள்ள நிலையில்தான் இந்த நோய் தோன்றுகிறது.

**கேள்வி:** புற்றுநோயின் தன்மை, அறிகுறிகள் என்ன ?

பதில்: உடலின் வெளிப்புறத்தில் இருந்தால் சுலபமாகக் கண்டுபிடித்து விடலாம். காயமோ, கையிலோ நெடுங்காலம் எந்தச் சிகிச்சைக்கும் கட்டுப்படாமல், ஒரு புண் ஆறாமலே இருக்குமானால், புற்றுநோயாக இருக்கலாம் என்று சந்தேகிக்கலாம். இம் மாதிரி வெளிப் புண்களுக்குச் சிகிச்சை எளிது. சதையின் மேல் காணப்படும் சில மச்சங்கள் கூடச் சில சமயங்களில் புற்றுநோயாக மாறி விடுவதும் உண்டு. புற்று நோயின் 'செல்'கள் காலிஃப்ளவர் பூ மாதிரி குடை கவிழ்த்தது போலிருக்கும். மனித உடல் இவைகளை ஏற்றுக் கொள்ளாமல் வெளியே தள்ளுகிறது. உடலுக்குள் புற்றுநோய் மறைவாக இருந்தால் 'எக்ஸ்-ரே' முதலிய பல சோதனைகளின் மூலம் கண்டறிய வேண்டும். வயிற்றில் புற்றுநோய் கண்டால் ஒருவித வலி ஏற்படும். உணவுக் குழாயில் இருந்தால் சாப்பிடும் போது ஏதோ அடைப்பது போலிருக்கும்.

**கேள்வி:** இந்த வியாதிக்குச் சிகிச்சையின் மூலம் பூரண நிவாரணம் அளிக்க இயலுமா ?

பதில்: நோய் கண்டவுடனேயே சிகிச்சை தொடங்கினால் நல்ல பலனளிக்கும். ரேடியம் ஊசி, கோபால்ட் சிகிச்சை இவற்றால் குணம் ஏற்படும். நோய் முற்றிவிட்டால் நிலைமை வேறு. சிலருக்கு ஆபரேஷன் செய்த பிறகு பத்து ஆண்டுகளுக்கு மேல் ஆகியும் இந்நோய் தலைகாட்டுவதில்லை. சில 'கேஸ்'களில், சில மாதங்களிலேயே திரும்ப வந்து தொல்லை கொடுப்பதும் உண்டு.

**கேள்வி:** எதையுமே வருமுன் காப்பது நல்லதல்லவா ? புற்றுநோய் வராமல் தடுக்க என்ன வழி ?

பதில்: அளவுக்கு மீறிப் புகை பிடிப்பது, புகையிலையைக் குதப்புவது தவிர்க்கப்பட வேண்டும். குறிப்பிட்ட சில உடலுறுப்புக்களில் இடைவிடாது எரிச்சல் (Irritation) ஏற்படுவதையும் தவிர்க்க வேண்டும். எதிலும் அளவோடு இருப்பது நல்லது என்று குறிப்பாகச் சொன்னால் போதுமே?

— ரா. பா.



இந்துஸ்தான் போட்டோ பிலிம் தொழிற்சாலையின் கம்பீரமான தோற்றம்

# 'இச்சா பிலிம்'ம் 'அச்சா டீ'யும்

இந்தியாவிலேயே முதலாவதான போட்டோ பிலிம் தயாரிக்கும் தொழிற்சாலை உதகமண்டலத்தில் உள்ளது. இது உருவாக ஒவ்வொரு நிலையிலும் பல தடங்கல்கள், தாமதங்கள், முட்டுக் கட்டைகள். இந்தியாவில் பிலிம் தொழிற்சாலையை அமைக்க எட்டு இடங்களைச் பொரிக தெய்தார்கள். இதில் மிகச் சிறப்பானது என்று பெயர் பெற்றது உதகமண்டலம்தான். புகை, புழுதி, தூசி இவைகளால் மாசுபடாத சூழ்நிலை, உப்புகள் கலப்பில்லாத ஏராளமான நல்ல தண்ணீர், ஆண்டு முழுதும் குளுகுளு சீதோஷ்ணம், சீரான மழை—இத்தனையும் ஒருங்கே கொண்ட இடத்தில்தான் போட்டோ பிலிம் தொழிற்சாலையை அமைக்க முடியும். இது அத்தனையும் கொண்டதாக விளங்கிய இடம் உதகை ஒன்றுதான். 1960ல் ஒரு பிரெஞ்சுக் கம்பெனியின் கூட்டுறவுடன் ஒப்பந்தமாகிப் பன்னிரண்டு கோடி ரூபாயில் கட்டி முடிப்பதாகத் திட்டமிடப்பட்டு முந்நூறு ஏக்கர் நிலப்பரப்பில் 1961 முதல் கட்டட வேலை தொடங்கியது. பல தடங்கல்கள், கட்டட அமைப்பில் மாறுதல்கள் — எல்லாவற்றையும் தாண்டித் தொழிற்சாலை ஒருவிதமாக இப்போது பிலிம் உற்பத்தி செய்யும் நிலையில் இருக்கிறது. என்றாலும் அரசாங்க நிறுவனம் இல்லையா? லாபத்தில் செயல்படுகிறது என்று சொல்ல முடியவில்லை. எக்ஸ்ரே, சினிமா, புகைப்படம் ஆகியவற்றுக்கான பிலிம்கள்; புகைப்படப் பிரதி எடுக்கும் காகிதங்கள் ஆகியவற்றைத் தயாரிக்க இந்தத் தொழிற்சாலையில் வசதிகள் உள்ளன. கலர் பிலிம் தயாரிப்புக்கு இன்னும் திட்டமிடப்படவில்லை. தொழிற்சாலையின் முக்கிய பகுதிகளில் ஒளிச் சூனியமாக்கப்பட்டு அங்கு பிலிமின் முக்கிய நிலைகள் உருவாக்கப்படுகின்றன. ஆகவே, அங்கு பார்வையாளர்களுக்கு அனுமதி கிடையாது; இருட்டடிப்புத்



பசுமைத் தேயிலைக் கொழுந்துக் குவியலைப் பார்க்கிறார்கள் பத்திரிகைக்காரர்கள். அது எப்படி பக்குவப் படுத்தப்படுகிறது என்பதை விளக்குகிறார் தேயிலை நிறுவன நிர்வாகி.

---

தான்! தொழிற்சாலையில் பணியாற்றுவோரெல்லாம் இங்கு வந்து குளித்துவிட்டுப் பிரத்தியேகமான உடையணிந்தே உள்ளே போக வேண்டும்.

ஒரு நிலைவரையில்தான் வெளிச்சத்தில் வேலை நடைபெறும் பகுதி. அங்கு போகவே பார்வையாளரும்கூட விசேஷச் சீருடை அணிய வேண்டும்.

இச்சா பிலிம் தயாரிப்பைப் பார்த்தபின், ஒரு கப் தேநீர் அருந்தினால் 'அச்சா'வாக இருக்கும் என்று தோன்றியது. நீலகிரியில் தேயிலையின் நினைவு வராமலிருக்காதே. குன்னூரில் தேயிலைத் தொழிற்சாலைக்குப் போன பிறகுதான், 'இந்தியர்களாகிய நாம் குடிப்பது' புகழ் பெற்ற இந்தியத் தேயிலையே அல்ல. புகழ் பெறாத இந்தியத் தேயிலைதான் என்பது புரிந்தது.

'அச்சா' தேயிலையெல்லாம், அதாவது, தேயிலையின் முதல் இரண்டாந்தரச் சரக்கெல்லாம் அந்நியச் செலாவணியைக் கொண்டு வர ஏற்றுமதிச் சரக்காகிப் போகின்றன. நல்ல டீயை நாம் குடிப்பதே

இல்லை. நாலாந்தர சரக்குத்தான் நமக்குக் கிடைக்கிறது. டீ ரசிகரான நண்பர் ஒருவர், முதல்தரமான இந்திய டீ எப்படி இருக்கும் என்பதை அறிவதற்காகவாவது வெளி நாட்டுக்குப் போய்விட்டு வர வேண்டும் என்றார். ஆமோதித்தேன். கண்ணும்பு என்றால் நாக்கா வெந்து போகும்?

தமிழக அரசினர் பத்திரிகையாளர்களுக்காக ஏற்பாடு செய்திருந்த *சுற்றுப் பயணத்தில் பல அணைக்கட்டுகளையும் பார்க்கும் வாய்ப்பு கிட்டியது. தமிழகத்தில் சாகுபடியாகும் நிலம் மொத்தம் 14·83 மிலியன் ஏக்கர்! இவற்றுக்குப் பாசன வசதி செய்து தருவது அரசினர் கடமை அல்லவா? சுதந்திரம் பெற்றபின் பல நீர்ப்பாசனத் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டுள்ளன. ஒரு திட்டத்தை முக்கியமாக இங்கு கவனிப்போம்.

இது ஆசியாக் கண்டத்திலேயே மிகப் பெரிய பல நோக்குத் திட்டமாகும். இத்திட்டத்தின் இன்னொரு பெருமை, இதன் ஆய்வு, அமைப்பு, நிர்வாகம் அனைத்துக்கும் இந்தியப் பொறி இயல் வல்லுநர்களே பொறுப்பேற்றுள்ளனர் என்பதாகும்.

பரம்பிக்குளம் ஆழியாறு பலநோக்குத் திட்டத்தில் எட்டு ஆறுகள் இணைக்கப்படுகின்றன. இவற்றில் நீராறு, சோலையாறு, பரம்பிக்குளம், தூனக் கடவு, பெருவாரிப் பள்ளம், தேக்கடி ஆகிய ஆறுகள் ஆனைமலைக் குன்றுகளிலும், ஆழியாறு, பாலாறு ஆகியவை சமவெளியிலும் அமைந்துள்ளன. இந்நதிகளின் குறுக்கே அணை கட்டி ஒன்றில் தேங்கும் நீரை மற்றொன்றுக்குச் சுரங்கங்கள் வாயிலாகக் கொண்டு சென்று கோவை மாவட்டத்தின் சமவெளிப் பகுதியிலும் கேரள மாநிலத்தின் சித்தூர்ப் பகுதியிலும் பாசனத்துக்குப் பயன்படுத்தப்படும். இத்திட்டம் மின் உற்பத்திக்கும் வாய்ப்பளித்துள்ளது.



தென்னகத்தின் மிக உயர்ந்த மலைமுடியான 'தொட்டபெட்டா'வில் பத்திரிகைப் பிரதிநிதிகள்.

ஆனைமலைக் குன்றுகளில் உற்பத்தியாகித் தமிழ்நாடு கேரள மாநிலங்களினூடே சென்று அரபிக் கடலில் கலக்கும் ஒருசில ஆறுகளைப் பயன்படுத்துவதே பரம்பிக்குளம் ஆழியாறு திட்டத்தின் குறிக்கோளாகும். இந்த ஆறுகள் தமிழகத்தில் உற்பத்தியானாலும் கேரள மாநிலத்தில் கிளை நதிகளாகப் பெருகி ஓடுவதால் இரு மாநிலங்களுக்கும் பொதுவாக உள்ளன. மேற்குத் தொடர்ச்சி மலையின் பின்புறம் அமைந்துள்ள கோவை மாவட்டத்தின் ஒரு பகுதி இயற்கை வளமற்றுக் குறைந்த வளமுடைய வறண்ட நிலமாகத் திகழ்கிறது. ஆகவே, இப்பகுதி வாழ் மக்களின் வாழ்வை மலரச் செய்வதற்காகவே பரம்பிக்குளம் ஆழியாறு திட்டம் உருவாகி வருகிறது. ஆனால் இந்த ஆறுகளைப் பயனுடையதாக்கிக் கொள்ளக் கேரள மாநிலத்தின் அனுமதி பெற வேண்டியிருக்கிறது. ஆகவே கேரள அரசுடன் பேச்சு வார்த்தை நடத்தி இரு மாநிலங்களுக்கும் பயன் தரும் வகையில் இத்திட்டம் உருவாக்கப்பட்டது.

இத்திட்டத்தில் நீராறு அணைக்கட்டு, சோலையாறு அணை, பரம்பிக்குளம் அணை, தூனக்கடவு அணை, பெருவாரிப் பள்ளம் அணை, தேக்கடி அணை, ஆழியாறு அணை, திருமூர்த்தி அணை ஆகிய எட்டு அணைகள் இடம் பெறுகின்றன. இவற்றில் மிகவும் உயரமான பகுதியில் உள்ளது நீராறு அணை. இவ்வாற்றின் நீரைத் திருப்புவது குறித்து ஆய்வு வேலைகள் முடிவுபெற்றுள்ளன. வேலையைத் தொடங்கக் கேரள அரசின் ஒப்புதல் இன்னும் வரவில்லை.

இதே மாதிரி பெருவாரிப் பள்ளம் அணை வேலைகள் தொடங்கப்பட்டு ஏறத்தாழ 43 சதவிதம் முடிக்கப்பட்டுள்ளன. இத்தேக்கத்தினால் மூழ்கடிக்கப்படக்கூடிய பகுதிகளில் உள்ள மரங்களைக் கேரள வனத்துறை அகற்றும் வரை தாற்காலிகமாக இவ்வணை சம்பந்தப்பட்ட வேலைகளை நிறுத்தி வைக்கும்படி கேரள அரசு கேட்டுக் கொண்டதால் 1966 மார்ச் மாதத்திலிருந்து இவ்வணை அமைக்கும் வேலைக்குத் தடங்கல் ஏற்பட்டு நின்று போயிருக்கிறது.

* இந்தச் சுற்றுப்பயணம் குறித்து நமது நிருபர் எழுதிய மூன்று கட்டுரைகள் கல்கியில் ஏற்கெனவே இடம் பெற்றுள்ளன. இறுதிக் கட்டுரை இது.

தேக்கடி அணை அமைக்கும் வேலை தொடங்கப்படவே இல்லை. காரணம் கேரள மாநிலத்தின் தலை அசைப்பு சாதகமாக இல்லை. இப்படி இம் மாபெரும் பலநோக்குத் திட்டத்தின் மூன்று அணைகளுக்குக் கேரள அரசு முட்டுக்கட்டை போட்டு வருகிறது.

மைசூர், கேரளம், தமிழ்நாடு என்ற எண்ணம் மாறி, இந்தியா என்ற நோக்கு ஆட்சியிலுள்ளோரிடமே ஏற்படாதபோது, தேசிய ஒருமைப்பாடு பற்றி மக்களிடம் உபதேசம் செய்வதில் புண்ணியமென்ன?

ஐந்து மாவட்டங்களை ஏழு நாட்களில் பத்திரிகையாளர்களுக்கு மின்னல் வேகத்தில் சுற்றிக் காட்டிக் கொண்டு வந்து சேர்த்த பெருமை தமிழக அரசுக்கு உண்டுதான் என்றாலும் ஒரே ஒரு வேண்டுகோள்: அரசு இப்படியொரு சுற்றுலாவுக்கு மறுபடியும் ஏற்பாடு செய்யுமானால் ஒரு நாளைக்கு இத்தனை நிகழ்ச்சிகளுக்குமேல் இருக்கக்கூடாது என்று வரையறை செய்ய வேண்டும். தமிழக அரசின் ஒத்துழைப்புடன் நிறைவேறியுள்ள திட்டங்கள் எல்லாவற்றையும் பத்திரிகையாளர்களுக்கு ஒரே மூச்சில் காட்டிவிட வேண்டும் என்ற ஆர்வம் நியாயமானதாக இருக்கலாம்; ஆனால் குறுகிய காலத்தில் பல நிகழ்ச்சிகளைத் திணித்து ஓய்வோ உறக்கமோ இல்லாமல் செய்வதினால் எதிர்பார்க்கும் பலன் கிட்டாது.

இந்தச் சுற்றுப் பயணத்தைத் திறம்பட நடத்திக் கொடுத்த பொறுப்பு அலுவலர் திரு கிருஷ்ணபாரதி அவர்களையும், கிராம வளர்ச்சித் துறை பொதுஜனத் தொடர்பு அதிகாரி திரு வேங்கடசாமி அவர்களையும் தான் சேர வேண்டும். எந்த இக்கட்டிலும், எந்தச் சோதனையிலும் சிரித்த முகத்துடன் விளங்கி எந்தப் பிரச்னையையும் சமாளித்தார்கள் இவர்கள். ஒரு காரியத்தைத் திட்டமிடுவார்கள். ஆனால் அதை அமுல்படுத்த முடியாதபடி ஏதேனும் ஒரு தடங்கல் வந்து சேரும். அப்போது பத்திரிகையாளர்களைக் கிருஷ்ணபாரதியும் வேங்கடசாமியும் இதமாக, இங்கிதமாகப் பேசிச் சமாளித்தார்கள்.

வழிகாட்டிபோல, சோர்வுற்ற போது உற்சாகமூட்ட வழித் துணைவராக வந்திருந்தார் தமிழக அரசு போக்குவரத்துப் பொதுஜனத் தொடர்பு அதிகாரி திரு தீனதயாளு. பத்திரிகைப் பிரதிநிதிகளுடன் ஒருவராக ஒன்றிப் போய் அவர்களின் சகல சில்லறைத் தேவைகளையும் கவனித்துக் கொண்டவர் உதவிப் பொறுப்பு அலுவலர் திரு ஜகதீசன். எங்கு திரும்பினாலும் எல்லார் முன்னும் பம்பரமாகச் சுழன்றபடி பணி புரிந்தார். எதற்கும், யாரும் 'ஜகதீசன், ஜகதீசன்' என்று அழைத்தவண்ணமாக இருந்தார்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

எல்லாரது அன்புக்கும் பாராட்டுக்கும் உரியவராக விளங்கியவர்கள் தமிழக அரசுப் போக்குவரத்தின் 'டீலக்ஸ் கோச்சை' ஓட்டிய டிரைவர் திரு சுப்ரமணியமும் அவரது உதவியாளரான மெக்கானிக் திரு வீரராகவனும்தான். எந்த மலைப் பாதையிலும், திருப்பத்திலும், காட்டுப் பாதையிலும் உள்ளிருப்போருக்கு எந்தவிதச் சஞ்சலமுமின்றிப் பக்குவமாகப் பஸ்ஸைச் செலுத்தி வந்தார் டிரைவர்.

தமிழகத்தின் எழில் வளம், தொழில் வளம், நிலவளம், நீர்வளம் அனைத்தையும் நன்கு ரசித்து உணர வாய்ப்பளித்த இந்தச் சுற்றுப்பயணம் மறக்கமுடியாத ஓர் அனுபவம்.

— **கௌசிகன்**

## பக்திப் பணிக்குப் பொன்விழா



புதுக்கோட்டை ஸ்ரீ கோபால கிருஷ்ண பாகவத ஸ்வாமிகளின் பக்திப் பணி நாடறிந்தது. உண்மையான பக்தியும், உருக்கமான சங்கீதமும் கலந்து பகவந் நாமங்களைச் சங்கீர்த்தனம் செய்யும் அப்பெரியார் ஆயிரம் பல்லாயிரம் மக்களுக்குத் தெய்விக உணர்ச்சியை ஊட்டி வருகிறார். அன்பர்களால் 'அப்பா' என்றே அழைக்கப்படும் அவர் புதுக்கோட்டையில் ஆண்டுதோறும் ஸ்ரீலக்ஷ்மி நரசிம்ம ஜயந்தி மகோற்சவத்தைப் பத்து தினங்கள் கோலாகலத்துடன் நடத்தி வருகிறார். இவ்வருடம் இந்த உத்ஸவத்தின் ஐம்பதாவது ஆண்டாகும். இந்தப் பொன் விழாவை முன்னிட்டுப் புதுக்கோட்டையில் இந்த உற்சவம் தொடர்ந்து நடைபெறுவதற்கெனவே 'ஸ்ரீலக்ஷ்மி நரசிம்ம ஜயந்தி உத்சவப் பொன் விழா மண்டபம்' ஒன்று நிர்மாணிக்கப் பக்த கோடிகள் திட்டமிட்டுள்ளனர். இதற்கு ரூ. 40,000 தேவைப்படும். 'அப்பா'வின் கைங்கரியம் நடைபெறப் 'பிள்ளை'கள் அனைவரும் உதவ வேணும். **ஸ்ரீ எஸ். சேஷாத்திரி, கௌரவ காரியதரிசி, அகில இந்திய சாயி சமாஜம், சென்னை - 4** என்ற முகவரிக்கு நன்கொடை அனுப்பி வைக்கலாம்.

இன்றைக்கு 970 ஆண்டுகளுக்கு முன்பு சோழ சாம்ராஜ்யம் குமரி முனையிலிருந்து வட பெண்ணை வரையில் பரவியிருந்தது. இரண்டாவது பராந்தகர் என்றும் பழையாறைச் சுந்தர சோழர் என்றும் பெயர் பெற்ற சக்கரவர்த்தி அந்தப் பெரிய சாம்ராஜ்யத்தை ஆண்டு வந்தார். முத்தரைய வம்சத்தை முறியடித்து அவர்களிடமிருந்து விஜயாலய சோழன் கைப்பற்றிய தஞ்சாவூர் நகரம் சுந்தர சோழரின் காலத்தில் சோழ நாட்டுக்குத் தலைநகரமாயிற்று. அதற்கு முன்பு நூறு ஆண்டு காலமாகக் குடந்தைக்கு அருகிலிருந்த பழையாறை, சோழர்களின் தலைநகரமா யிருந்தது.

சுந்தர சோழர் திருக்கோவலூர் மலையமானின் மகள் வானவன்மாதேவியை மணந்திருந்தார். அவர்களுக்கு இரண்டு புதல்வர்களும் ஒரு புதல்வியும் இருந்தனர். மூத்தவன் ஆதித்த கரிகாலன்; அடுத்தவள் குந்தவை; கடைக்குட்டிப் புதல்வன் பின்னால் சரித்திரத்தில் ராஜ ராஜ சோழன் என்று புகழ் பெற்ற அருள்மொழி வர்மன்.

சுந்தர சோழர் சிலகாலமாக நோய்வாய்ப்பட்டுத் தஞ்சாவூர் அரண்மனையில் படுத்த படுக்கையாயிருந்தார். பாரிச வாயுவினால் இரண்டு கால்களும் வலுவிழந்துவிட்டபடியால் நடமாடவும் பிரயாணம் செய்யவும் முடியாத நிலையில் இருந்தார்.

அண்ணன் தம்பிகளான பெரிய பழுவேட்டரையரும், சின்னப் பழுவேட்டரையர் காலாந்தக கண்டரும் சோழ சாம்ராஜ்யத்தில் அப்போது பேரதிகாரம் படைத்திருந்தார்கள். சாம்ராஜ்யத்தின் பொக்கிஷமும் தானிய பண்டாரமும் வரி விதிக்கும் அதிகாரமும் பெரிய பழுவேட்டரையரிடம் இருந்தன. சின்னப் பழுவேட்டரையர் தஞ்சைக் கோட்டையின் காவற் படைக்கு அதிபதியாக விளங்கினார்.

இளம் வயதிலேயே போர்க்களம் சென்று வீராதி வீரன் என்று பெயர் வாங்கிய ஆதித்த கரிகாலன் இளவரசுப் பட்டம் சூட்டப் பெற்றுக் காஞ்சியில் வடதிசைச் சைன்யத்தின் அதிபதியாகத் தங்கியிருந்தான்.

தென்திசைப் படையின் மாதண்ட நாயகனாகிய அருள்மொழி வர்மன் இலங்கைத் தீவுக்குப் பெரும் படையுடன் சென்று போர் புரிந்து கொண்டிருந்தான்.

அவர்களுடைய சகோதரி குந்தவைப் பிராட்டியும் மற்றும் பல சோழ குலத்து அந்தப்புர மாதரும் பழையாறை நகரில் இருந்தார்கள்.

இத்தகைய சமயத்தில் நாடு நகரமெங்கும் ஓர் அதிசயமான வதந்தி பரவியது. சுந்தர சோழருக்கும் அவருடைய குமாரர்களுக்கும் எதிராக ஒரு பெரிய சதி நடக்கிறது என்பதுதான் அவ்வதந்தி. பழுவேட்டரையர்களும் மற்றும் சம்புவரையர் முதலிய சோழ நாட்டுப் பிரமுகர்கள் பலரும் அச்சதியில் கலந்து கொண்டிருந்தனர்.

சுந்தர சோழரின் பெரிய தந்தையும் சிவஞான செல்வருமான கண்டராதித்தரின் குமாரன் மதுராந்தகன் சில காலத்துக்கு முன்பு வரையில் சிவபக்தியில் திளைத்த வைராக்கிய சீலனாக விளங்கினான். சின்னப்பழுவேட்டரையரின் மகளை மணந்து கொண்டதிலிருந்து அவனுடைய மனம் மாறி உலக வாழ்க்கையில் ஈடுபட்டது. சுந்தர சோழச் சக்கரவர்த்திக்குப் பிறகு மதுராந்தகனைச் சிங்காதனம் ஏற்றுவதென்று, சதி செய்தவர்கள் தீர்மானித்திருந்தார்கள்.

வானத்தில் சிலகாலமாகத் தூமகேது என்னும் வால்நட்சத்திரம் காணப்பட்டு வந்தது. இதை ஓர் உற்பாதமாக மக்கள் கருதினார்கள். இராஜ வம்சத்தில் ஏதோ விபரீதம் நிகழப் போகிறது என்று நாடு நகரமெல்லாம் ஜனங்கள் மிகுந்த கவலையுடன் பேசிக் கொண்டார்கள்.

காஞ்சியில் இருந்த இளவரசன் ஆதித்த கரிகாலன் காதுக்கு இச்செய்திகள் எட்டின. தன் தந்தையைப் பற்றி அவன் மிக்க கவலை கொண்டான். பழுவேட்டரையர்களின் ஆதிக்கத்திலிருந்து சுந்தர சோழரை மீட்டுக் காஞ்சிக்குக் கொண்டுவர விரும்பினான்.

காஞ்சியில் ஆதித்த கரிகாலன் புதிதாகப் பொன் மாளிகை கட்டியிருந்தான். சுந்தர சோழர் காஞ்சிக்கு வந்து சில காலம் அப்பொன் மாளிகையில் தங்கியிருக்க வேண்டுமென்று பிரார்த்தித்து ஓலை ஒன்று எழுதினான். அதை வல்லவரையன் வந்தியத்தேவன் என்னும் தன் அந்தரங்க நம்பிக்கைக்குரிய வீரனிடம் கொடுத்தனுப்பினான்.

ஆதித்தன் தன் இளம் வயதில் நந்தினி என்னும் அர்ச்சகர் வீட்டுப் பெண்ணைக் காதலித்தான். அது தகாத காதல் என்று செம்பியன் மாதேவி அவனுக்குப் போதனை செய்தாள். பிரசித்தி பெற்ற சிவஞானி கண்டராதித்தரின் பட்டமகிஷி செம்பியன் மாதேவி. சோழ வம்சத்தைச் சேர்ந்த அனைவரும் அந்த மூதாட்டியிடம் பக்தி கொண்டு நடந்தனர். ஆதித்த கரிகாலன் தன் பெரிய பாட்டியின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்தான். ஆனால் நந்தினியை அவனால் அடியோடு மறக்க முடியவில்லை.

பெரிய பழுவேட்டரையர் அறுபது பிராயத்துக்கு மேலே நந்தினியை மணந்து கொண்டார். நந்தினி பழுவூர் அரண்மனையில் சர்வாதிகாரியானாள். தன்னை நெருங்கிய யாரையும் தன் இஷ்டப்படி செய்விக்கும் மாய மோகன சக்தியை நந்தினி பெற்றிருந்தாள். ஒரு முறை அவள் ஆதித்த கரிகாலனிடம் தன் சக்தியைச் செலுத்தினாள். சுந்தர சோழரைச் சிறையில் அடைத்துவிட்டு, கிழவர் பழுவேட்டரையரைக் கொன்றுவிட்டு, தன்னை மணந்து தஞ்சை சிம்மாதனத்தில்

# பூர்வ கதை



ஏற்றுவிக்கும்படி ஆதித்தனைக் கேட்டாள். அந்தப் பயங்கரச் செயலுக்குக் கரிகாலன் உட்பட மறுத்து விட்டான். ஆயினும் இப்போது தஞ்சாவூருக்குப் போவது என்றாலே கரிகாலனுக்கு அச்சமா யிருந்தது. ஆகையினாலேயே வந்தியத்தேவனை அனுப்பினான்.

வந்தியத் தேவன் வழியில் கடம்பூர் சம்புவரையர் மாளிகையில் தங்கியிருந்தபோது சோழ நாட்டுப் பிரமுகர்களின் சதியாலோசனையைப் பற்றித் தெரிந்து கொண்டான். பிறகு தஞ்சாவூர் போய்ச் சேர்ந்தான். அங்கே நந்தினியைச் சந்தித்துப் பனை இலச்சினை யுள்ள முத்திரை மோதிரத்தை வாங்கிக்கொண் டான். அதன் உதவியால் சுந்தர சோழரைப் பேட்டி கண்டான். அவரைச் சூழ்ந்திருந்த அபாயங்களைப் பற்றி எச்சரிக்கை செய்ய எண்ணிய சமயத்தில் சின்னப் பழுவேட்டரையர் வந்து குறுக்கிட்டார்.

வந்தியத் தேவன் தற்செயலாகத் தஞ்சாவூர்ப் பொக்கிஷம் வைத்திருந்த நிலவறையைப் பார்க்க நேர்ந்தது. இதையறிந்த பழுவேட்டரையர்கள் அவன் தப்பிச் செல்லாமல் கைப்பற்ற முயன் றார்கள். அவர்களுடைய வீரர்களுக்கு அவன் 'டிமிக்கி' கொடுத்துவிட்டுப் பழையாறையை அடைந் தான். குந்தவை தேவியைப் பார்த்து ஓலையைக் கொடுத்தான்.

ஏற்கெனவே குந்தவையைப் பற்றிக் கேள்விப் பட்டு வந்தியத்தேவன் தன் உள்ளத்தை அவளுக்குப் பறி கொடுத்திருந்தான். குடந்தையிலும் அரிசி லாற்றங்கரையிலும் அவளைச் சந்தித்தும் இருந் தான். இலங்கைக்குப் போக வேண்டும் என்ற ஆசை யும் அவன் மனத்தில் இருந்து கொண்டிருந்தது. எனவே, குந்தவை சொன்னபடி, அவன் ஈழத்துக்கு உடனே செல்ல ஆயத்தமானான். "பொன்னியின் செல்வ! இராஜ்யத்துக்குப் பேரபாயம் வந்திருக் கிறது. உடனே புறப்பட்டு வா!" என்று குந்தவை ஓலை எழுதிக் கொடுத்தாள். அதை எடுத்துக் கொண்டு வந்தியத் தேவன் புறப்பட்டான்.

ஆதித்த கரிகாலனுடைய உள்ளம் மிகக் குழம்பி யிருந்தது. வந்தியத் தேவனைப் பற்றித் தகவல் ஒன்றும் தெரியாதபடியால் அவனுடைய கவலை அதிகமாயிற்று. தம்பிக்கு இளவரசுப் பட்டம் கட்டி விட்டுத் தான் வெளிநாடுகள் பலவற்றுக்கும் சென்று தமிழர் வீரத்தையும் சோழர் புகழையும் நிலைநாட்ட விரும்பினான். ஆகையால் தன் சகோ தரன் அருள்மொழி வர்மனைத் தருவித்துக் காஞ்சி யில் இளவரசுப் பட்டம் சூட்டிவிட்டுத் தான் ஈழத் துக்கும், சாவகம், புட்பகம், கடாரத்துக்கும் போக விரும்பினான். அவனுடைய மற்றொரு அந்தரங்க நண்பனான பல்லவ குல பார்த்திபேந்திரனை அழைத் துத் தன் மனக் கவலைகளை வெளியிட்டான். இலங் கைக்குச் சென்று அருள்மொழி வர்மனை உடனே காஞ்சிக்கு அழைத்து வரும்படி பணித்தான். பார்த்தி பேந்திரனும் அதற்குச் சம்மதித்தான்.

வந்தியத் தேவன் தன் பிரயாணத்தில் ஆழ் வார்க்கடியான் என்னும் வீர வைஷ்ணவனைச் சந் தித்தான். ஆழ்வார்க்கடியான் நாடெங்கும் சஞ் சரித்துத் துப்பறிந்து வந்தான். ஆனால் யாருடைய சார்பில் அவன் வேலை செய்கிறான் என்று தெரிய வில்லை. ஆகையால் அவன் பேரில் வந்தியத் தேவனுக்கு ஐயம் உண்டாகி யிருந்தது.

இனி இவ்விதழில் ஆரம்பமாகும் "பொன்னியின் செல்வன்" இரண்டாம் பாகத்தைப் பழைய நேயர் களோடு புதிய வாசகர்களும் சேர்ந்து படிக்கத் தொடங்கலாம்.

## முதல் அத்தியாயம்

# பூங்குழலி

அந்தி நேரம் அமைதி பெற்று விளங் கியது. கோடிக் கரையின் ஓரத்தில் கடல் அலை அடங்கி ஓய்ந்திருந்தது. கட்டுமரங்களும் படகுகளும் கரையை நெருங்கிக் கொண்டிருந்தன. கடலில் இரை தேடிச் சென்ற பறவைகள் திரும்பி வந்து கொண்டிருந்தன. கரை யில் சிறிது தூரம் வெண் மணல் பரந் திருந்தது. அதற்கு அப்பால் வெகு தூரத்துக்கு வெகு தூரம் காடு படர்ந் திருந்தது. காட்டு மரங்களின் கிளைகள் ஆடவில்லை; இலைகள் அசையவில்லை.



நாலா பக்கமும் நிசப்தம் நிலவியது. செங்கதிர் தேவன் கடலும் வானும் கலக்கும் இடத்தை நோக்கி விரைந்து இறங்கிக் கொண்டிருந்தான். மேகத் திரள்கள் சில சூரியனுடைய செங் கதிர்களை மறைக்கப் பார்த்துத் தாங் களும் ஒளி பெற்றுத் திகழ்ந்தன.

கரை ஓரத்தில் கடலில் ஒரு சிறிய படகு மிதந்தது. கடலின் மெல்லிய அலைப் பூங்கரங்கள் அந்தப் படகைக் குழந்தையின் மணித் தொட்டிலை ஆட்டு வது போல மெள்ள மெள்ள அசைத் தன. அந்தப் படகில் ஓர் இளம் பெண் இருந்தாள். அவளைப் பார்த்ததும் சேந் தன் அமுதன் தன் மாமன் மகளைக் குறித்து வர்ணனை செய்தது நமக்கு நினைவுக்கு வருகிறது. ஆம்; இவள் பூங்குழலியாகத்தான் இருக்க வேண் டும். பெயருக்குத் தகுந்தாற்போல் இவள் கூந்தலில் ஒரு தாழம்பூவின் இதழ் அழகு பெற்றுத் திகழ்ந்தது. நீண்ட கரிய கூந்தல் சுருண்டு சுருண்டு விழுந்து அவள் கடைந்தெடுத்த தோள் களை அலங்கரித்தன. கடல் அலைகள் தரையில் ஒதுக்கும் சங்குகள், சிப்பிகள் முதலியவற்றை ஆரமாக்கி அவள் அணிந்து கொண்டிருந்தாள். ஆனால் இவையெல்லாம் அவளுடைய மேனி யில் பட்டதனால் தாங்களும் அழகு பெற்றனவே யன்றி, அவளை அலங் கரித்ததாகச் சொல்ல முடியாது. அழகே ஒரு வடிவம் தாங்கி வந்தால், அதற்கு எந்த ஆபரணத்தைக் கொண்டு அழகு செய்ய முடியும்?

பூங்குழலி படகில் ஒய்யாரமாகச் சாய்ந்து கொண்டு பாடினாள். அவளு டைய கானத்தைக் கேட்பதற்காகவே கடலும் அலை அடங்கி ஒய்ந்திருந்தது போலும்! அதற்காகவே காற்றும் வீசி அடிக்காமல் மெள்ள மெள்ளத் தவழ்ந்து வந்தது போலும். தூரத்தில் தெரிந்த காட்டு மரங்களும் இலை அசை யாமல் நின்று அவளுடைய கானத்தைக் கவனமாகக் கேட்டன போலும்! வான மும் பூமியும் அந்தக் கானத்தைக் கேட்டு மதிமயங்கி அசைவற்று நின்றன போலும்! கதிரவன் கூட அந்தக் கானத்தை முன்னிட்டே மூலைக் கடலை அடைந்தும் முழுகி மறையாமல் தயங்கி நிற்கின்றான் போலும்!

தேனில் குழைந்து வானில் மிதந்து வந்த அப் பாடலை நாமும் சற்றுச் செவி கொடுத்துக் கேட்கலாம்:

**"அலை கடலும் ஓய்ந்திருக்க**
**அகக் கடல்தான் பொங்குவதேன்?**
**நில மகளும் துயிலுகையில்**
**நெஞ்சகந்தான் பதைப்பது மேன்?**
**காட்டினில் வாழ் பறவைகளும்**
**கூடுகளைத் தேடினவே!**
**வேட்டுவரும் வில்லியரும்**
**வீடு நோக்கி ஏகுவரே!**

**வானகமும் நானிலமும்**
**மோனமதில் ஆழ்ந்திருக்க**
**மான்விழியாள் பெண்ணொருத்தி**
**மனத்தில் புயல் அடிப்பதுமேன்?**
**வாரிதியும் அடங்கி நிற்கும்**
**மாருதமும் தவழ்ந்து வரும்**
**கார்கையாள் உளந்தனிலே**
**காற்றுச் சுழன்றடிப்பது மேன்?"**

அந்த இளமங்கையின் உள்ளத்தில் அப்படி என்ன சோகம் குடிகொண் டிருக்குமோ, தெரியாது! அவளுடைய தீங்குரலில் அப்படி என்ன இன்ப வேதனை கலந்திருக்குமோ, தெரியாது! அல்லது அப்பாடலின் சொற்களோடு ஒருவேளை கண்ணீரைக் கலந்துதான் பாடலை அமைத்து விட்டார்களோ, அதுவும் நாம் அறியோம். ஆனால் அந் தப் பாடலை அவள் பாடுவதைக் கேட் கும்போது நமது நெஞ்சம் விம்மி வெடித்து விடும் போன்ற உணர்ச்சி ஏனோ உண்டாகிறது.

பூங்குழலி கானத்தை நிறுத்தினாள். படகின் துடுப்பை நாலு தடவை வலித்தாள். படகு கரை அருகில் வந்து சேர்ந்தது. பூங்குழலி படகி லிருந்து துள்ளிக் குதித்துக் கரையில் இறங்கினாள். படகைக் கரையில் இழுத்துப் போட்டாள். கரையில் சில கட்டு மரங்கள் குப்பலாகக் கிடந்தன. அவற்றின் மீது படகு சாய்ந்து நிற்கும் படி தூக்கி நிறுத்தினாள். சாய்ந்து நின்ற படகில் தானும் சாய்ந்து கொண்டு ஒரு முறை சுற்றுமுற்றும் பார்த்தாள்.*

அதோ கலங்கரை விளக்கின் உச்சி மண்டபத்தில் தீமூட்டியாகி விட்டது. தீ ஜுவாலை விட்டு எரிகிறது. இனி இரவெல்லாம் அந்த ஜோதி எரிந்து கொண்டிருக்கும். கடலில் செல்லும் மரக் கலங்களுக்கு அது "அருகில் நெருங்க வேண்டாம்!" என்று எச் சரித்துக் கொண்டிருக்கும். கோடிக் கரை ஓரத்தில் கடலில் ஆழமே கிடை யாது. கட்டுமரங்களும் சிறிய படகு களும்தான் அந்தப் பகுதியில் கரை ஓரமாக அணுகி வரலாம். மரக்கலமும் நாவாயும் நெருங்கி வந்தால் தரை தட்டி மணலில் புதைந்து விடும். வேகமாகத் தரையில் மோதினால்

* இந்த இனிய காட்சியைத்தான் இவ்விதழ் மேல் அட்டையில் ஓவியர் மணியத்தின் அற்புதப் படைப்பாகக் காண்கிறீர்கள்.

கப்பல் பிளந்து உடைந்தும் போய்விடும். ஆதலின், கோடிக் கரையில் உள்ள கலங் கரை விளக்கம் கப்பல் ஓட்டிகளுக்கு மிகவும் அவசியமான உதவியைச் செய்து வந்தது. மற்றொரு பக்கத்தில் குட்டை மரங்கள் அடர்ந்த காட்டின் நடுவில் கோபுரம் ஒன்று தலை தூக்கி நின்றது. அதனடியில் கோடிக்கரை குழகர் கோவில் கொண்டிருந்தார். சுமார் இருநூறு ஆண்டுகளுக்கு முன்னால் ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனார் இந்தக் கோடிக்கரைக்கு வந்தார். காட்டின் மத்தியில் தன்னந் தனியே கோயில் கொண்டிருந்த குழகரைத் தரிசித்தார். "அந்தோ! இறைவா! இப்படி இந்தக் கடற்கரைக் காட்டின் மத்தியில் துணையின்றித் தனியே இருந்தீரே? இருக்க வேறு இடமா இல்லை? பக்தர்கள் கூட்டங் கூட்டமாக உமது புகழைப் பாடிக் கொண்டிருக்கும் ஸ்தலங்கள் எத்தனையோ இருக்க, இந்தக் கோடிக்கு வந்து பயங்கரக் காட்டிலே தனியே கோயில் கொண்டிருப்பதேன்? இக் கொடியோனுடைய கண்கள் இந்தக் காட்சியையும் காண நேர்ந்ததே!" என்று மனமுருகிப் பாடினார்.

**"கடிதாய்க் கடற்காற்று வந்தேற்றக் கரைமேல்**
**குடிதானயலே இருந்தாற் குற்றமாமோ?**
**கொடியேன் கண்கள் கண்டன கோடிக் குழகீர்**
**அடிகேள் உமக்கார் துணையாக இருந்தீரே?"**

**"மத்தம் மலிசூழ் மறைக்காடதன் தென்பால்**
**பத்தர் பலர் பாடவிருந்த பரமா!**
**கோத்தார் பொழில்சூழ் தருகோடிக் குழகா**
**எத்தாற் றனியே யிருந்தாய்? எம்பிரானே!"**

ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனார் வந்து தரிசித்து விட்டுப் போன இருநூறு ஆண்டுகளுக்குப் பிறகும் கோடிக் கரைக் குழகர் அதே நிலையில்தான் இருந்தார்.* சுற்றிலும் இன்னும் கொஞ்சம் காடுகள் மண்டிப் போயிருந்தன. அக்காடுகளில் மரப் பொந்துகளில் ஆந்தைகளும் கூகைகளும் குழறின. பார்ப்பதற்குப் பயங்கரமான வேடுவர்கள் சிலர்தான் காட்டின் மத்தியில் ஆங்காங்கு குடிசை போட்டுக் கொண்டு வசித்தார்கள்.

ஆம்; ஓரே ஒரு வித்தியாசம் இருந்தது. ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனார் இங்கு வந்திருந்தபோது கலங்கரை விளக்கம் இல்லை. சில ஆண்டுகளுக்கு முன்பு, முதற் பராந்தகரின் காலத்திலேதான் அது கட்டப்பட்டது. கலங்கரை விளக்கத்தில் பணி செய்வோருக்கென்று சில ஓட்டு வீடுகள் அதைச் சுற்றிக் கட்டப்பட்டன. கோடிக்கரைக் குழகர் கோயிலில் பூஜை செய்யும் பட்டரும் அங்கே வந்து குடியேறினார்.

---

* ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னர் இன்றைக்கும் கோடிக்கரை குழகர் அதே தனிமை நிலையில்தான் இருந்து வருகிறார்



பூங்குழலி கடற்கரை ஓரத்தில் படகின் மீது சாய்ந்த வண்ணம் நாற்புறமும் பார்த்தாள். கலங்கரை விளக்கத்தைப் பார்த்து அந்தப் பக்கம் போகலாமா என்று யோசித்தாள். பிறகு குழகர் கோயிலின் கோபுரக் கலசத்தை நோக்கினாள். அச்சமயம் கோயிலில் சேமங்கலம் அடிக்கும் ஓசை கேட்கவே, பூங்குழலி ஒரு தீர்மானத்துக்கு வந்தாள். அதற்குள் வீட்டுக்குப் போய் என்ன செய்வது? கோயிலுக்குப் போகலாம். பட்டரைத் தேவாரம் பாடச் சொல்லிக் கேட்கலாம். பிறகு பிரசாதமும் வாங்கிக் கொண்டு வரலாம்.

இப்படி முடிவு செய்து கொண்டு, பூங்குழலி கோயில் இருந்த திசையை நோக்கி நடந்தாள். ஆடிக்கொண்டும், பாடிக் கொண்டும், துள்ளிக் குதித்துக் கொண்டும் நடந்தாள். வழியில் மான் கூட்டம் ஒன்றைக் கண்டாள். மான்கள் மணல் வெளியைத் தாண்டிக் காட்டை நோக்கிச் சென்று கொண்டிருந்தன. ஏழெட்டுப் பெரிய மான்களோடு ஒரு சிறிய மான் குட்டியும் பாய்ந்து பாய்ந்து ஓடிக் கொண்டிருந்தது. மான் கூட்டத்தைப் பார்த்ததும் பூங்குழலிக்கு உற்சாகம் உண்டாயிற்று. அவற்றைப் பிடிக்கப் போவதுபோல் தொடர்ந்து குதித்து ஓடினாள். ஆனால் என்னதான் விரைவாக ஓடினாலும் மான்களோடு போட்டியிட முடியுமா! மான் கூட்டம் பூங்குழலியை முந்திக் கொண்டது.

முன்னால் சென்ற மான்கள் ஓரிடத்தில் நாலு கால்களையும் தூக்கி வானத்தில் பறப்பதுபோல் நீண்ட தூரம் தாவிக் குதித்தன. அங்கே புதைசேற்றுக் குழி இருக்கிறதென்று பூங்குழலி ஊகித்துக் கொண்டாள். பெரிய மான்களெல்லாம் அக்குழியை ஒரே தாண்டலில் தாண்டி அப்பால் பத்திரமாய் இறங்கி விட்டன. ஆனால் மான் குட்டியினால் முழுதும் தாண்ட முடியவில்லை. அக்கரை ஓரமாக அதன் பின்னங்கால்கள் சேற்றுக் குழியில் அகப்



பட்டுக் கொண்டன. முன்னங் கால் களைக் கரையில் ஊன்றி மான் குட்டி அனமட்டும் கரை ஏற முயன்றது. ஆனால் அதன் பின்னங் கால்கள் சேற்றில் மேலும் மேலும் புதைந்துகொண்டிருந்தன. தாய் மான் கரையில் நின்று குட்டியின் நிலையைக் கவலையுடன் நோக்கியது. ஆனால் தன் குட்டிக்கு உதவி எதுவும் செய்ய முடியவில்லை.

இதையெல்லாம் ஒரு நொடியில் பார்த்து அறிந்து கொண்ட பூங்குழலி அந்தப் புதை சேற்றுக் குழி எங்கே முடிகிறது என்பதைக் கண்டு தெரிந்து கொண்டாள். புதை குழி ஓரமாக ஓடிச் சென்று கெட்டியான இடத்தின் வழியாகக் கடந்து எதிர்ப்புறத்தில் மான் குட்டி சேற்றில் அகப்பட்டுக் கொண்டு தவித்த இடத்தை அணுகினாள். தாய் மான் முதலில் அவளைக் கண்டு மிரண்டது. பூங்குழலிக்கு மானின் பாஷை தெரியும் போலும்! மிருதுவான குரலில் அவள் ஏதோ சொல்லவும் தாய் மான் பயம் நீங்கி நின்றது. பூங்குழலி புதை சேற்றுக் குழியின் கரை ஓரத்தில் முன்னங் கால் களை மடித்து உட்கார்ந்து கைகளை நீட்டி மான் குட்டியைப் பற்றிப் பலமாக இழுத்துக் கரையேற்றினாள். சில விநாடி நேரம் அந்த மான் குட்டியின் உடம்பு வெட வெடவென்று நடுங்கிக் கொண்டிருந்தது. தாய் மான் அதன் அருகில் நின்று முகர்ந்து பார்த்துத் தைரியம் கூறியது போலும்! அவ்வளவுதான்! அடுத்த விநாடி தாயும் குட்டியும் மீண்டும் பாய்ந்தோடின.

"சீ! கொஞ்சமும் நன்றியில்லாத மிருக ஜன்மங்கள்!" என்று பூங்குழலி தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள். "ஆனால், மனிதர்களை விட இந்த மான்கள் மட்டமாய்ப் போய் விடவில்லை!" என்று அவளே தேறுதலும் சொல்லிக் கொண்டாள்.

பிறகு மறுபடியும் குழகர் ஆலயத்தை நோக்கி நடந்தாள்.

மணல் வெளியைத் தாண்டியதும், மரம் செடிகள் அடர்ந்த காட்டு வழியில் போக வேண்டி யிருந்தது. மேட்டில் ஏறியும் பள்ளத்தில் இறங்கியும் போக வேண்டி யிருந்தது. அந்தக் காட்டை இயற்கையின் விசித்திரங்களில் ஒன்று என்றே சொல்ல வேண்டும். அங்கே கற்பாறைகளினால் அமைந்த மலைகளோ, குன்றுகளோ இல்லை. ஒரே மணல்வெளிதான். ஆங்காங்கே மணல் மேடிட்டு, மணல் மேட்டின் மீது செடிகளும் மரங்களும் முளைத்ததினால் கெட்டிப்பட்டுக் குன்றுகளாகவே மாறிப் போயிருந்தன. குன்றுகளுக்குப் பக்கத்தில் பள்ளங்களும் இருந்தன. அத்தகைய காட்டில் வழி கண்டு பிடித்துப் போவது எளிய காரியமன்று. வெகுதூரம் நடந்து விட்டது போலத் தோன்றும்; ஆனால் திரும்பத் திரும்பப் புறப்பட்ட இடத்துக்கே வந்து கொண்டிருப்போம்!

பூங்குழலி அந்தக் காட்டு வழியில் புகுந்து அதிவிரைவாக நடந்து ஆலயத்தின் அருகே வந்து சேர்ந்தாள். கோவிலுக்கு வெளியிலும் உட்பிராகாரத்திலும் கொன்னை, பன்னீர் முதலிய மரங்கள் ஓங்கி வளர்ந்து மலர்ந்து குலுங்கிக் கொண்டிருந்தன.

பூங்குழலி ஆலயத்துக்குள் போனாள். பட்டர் அவளைப் பார்த்து முகமலர்ந்தார். அந்தக் கோவிலுக்குள் சுவாமி தரிசனம் செய்வதற்காக வருவோர் அருமை. ஆதலின் அருமையாக வருகிறவரைப் பார்த்துப் பட்டர் மகிழ்வது இயல்புதானே?

தேங்காய் மூடியும் பிரசாதமும் கொண்டு வந்து பட்டர் கொடுத்தார். "அம்மா! கொஞ்சம் காத்திருக்கிறாயா? நானும் இதோ சந்நிதியைப் பூட்டிக் கொண்டு வீட்டுக்கு வருகிறேன்!" என்றார். இருட்டிய பிறகு அந்தக் காட்டு வழியில் செல்வது கொஞ்சம் சிரமமான காரியம்தான். ஆனால் வழி காட்டுவதற்குப் பூங்குழலி இருந்தால் கவலையே கிடையாது.

"இருக்கிறேன், ஐயா! எனக்கு அவசரம் ஒன்றுமில்லை. மெதுவாகக் கோயில் கைங்கரியங்களை முடித்துக் கொண்டு புறப்படுங்கள்!" என்று பூங்குழலி கூறிவிட்டுக் கோயில் பிராகாரத்துக்கு வந்தாள். மரக் கிளை ஒன்றைப் பிடித்துக்கொண்டு பிராகாரத்தின் மதிள் சுவரின்மேல் தாவி ஏறினாள். மதிள் மூலையில் நந்தி பகவானுடைய பெரிய சிலை ஒன்று அமைத்திருந்தது. அந்தச் சிலை மீது சிறிது சாய்ந்த வண்ணம் மதிள் மீது காலை நீட்டிப் படுத்தாள். தேங்காய் மூடியைப் பல்லினால் கறண்டிச் சாப்பிடத் தொடங்கினாள்.

நாலாபுறமும் இருள் சூழ்ந்து வரும் விசித்திரத்தைப் பூங்குழலி பார்த்துக் கொண்டே யிருக்கையில் குதிரையின் காலடிச் சத்தத்தைக் கேட்டாள். சத்தம் வந்த வழியே ஆவலுடன் பார்த்துக்கொண்டிருந்தாள். குதிரைக் காலடியின் சத்தம் அவளுடைய உள்ளத்தில்

## மக்கள் ஆட்சியில்....

மக்கள் ஆட்சியில் வாக்காளர் கடமை என்ன? நமக்குப் பிடித்தமான ஒருவருக்கு வோட்டும் போட்டு அவர் வெற்றியடைந்தால் மகிழ்வுடன் நம் கடமை தீர்ந்து விடுகிறதா? இல்லை என்றால் மக்கள் ஆட்சியில் பொது மக்கள் வேறு எந்த விதத்தில் தங்கள் கருத்தை வலியுறுத்த முடியும் ?

சற்று நேரம் சிந்திக்கவும். பிறகு 33ம் பக்கத்தைப் புரட்டிப் பார்க்கவும்.

ஏதேதோ பழைய ஞாபகங்களை எழுப்பி அவனைக் கனவு லோகத்துக்குக் கொண்டு போயிற்று. எங்கிருந்தோ இனந் தெரியாத ஒரு துக்கம் வந்து நெஞ்சை அடைத்தது. வருகிறது யாராக இருக்கக்கூடும்? யாராயிருந்தால் நமக்கென்ன கவலை? கொஞ்ச காலமாகப் புது ஆள்கள் வருகிறதும், போகிறதும் அதிகமாய்த்தானிருக்கிறது. இராஜாங்கக் காரியமாக வருகிறார்களாம்; போகிறார்களாம். நேற்றைக்குக் கூட இரண்டு பேர் வந்திருந்தார்கள். அவர்களைப் பார்ப்பதற்கே அருவருப்பாக இருந்தது. அண்ணனைப் படகு வலிக்கச் சொல்லி ஈழத்துக்குச் சென்றார்கள். பணமும் நிறையக் கொடுத்தார்கள். அவர்களுடைய பணத்திலே இடி விழட்டும். யாருக்குப் பணம் வேண்டும்? பணத்தை வைத்துக் கொண்டு இந்த நடுக் காட்டில் என்ன செய்வது? ஆனால் அண்ணனுக்கும் அண்ணிக்கும் பணம் என்றால் ஒரே ஆசை. எதற்கோ தெரியவில்லை! சேர்த்துச் சேர்த்துப் புதைத்து வைக்கிறார்கள்!

குதிரைக் காலடிச் சத்தம் இதோ அருகில் நெருங்கி வருகிறது. ஒரு குதிரை, அல்ல; இரண்டு குதிரைகள் வருவது போல் தோன்றுகிறது. இதோ அவை தென்படுகின்றன. பள்ளத்திலிருந்து மெள்ள மெள்ள மேட்டில் ஏறி வருகின்றன. நெடுந்தூரம் பிரயாணம் செய்து களைத்துப் போன குதிரைகள். ஒவ்வொரு குதிரை மீதும் ஓர் ஆள் வருகிறான். முதலில் வருகிற குதிரை மேல் வருகிறவன் வாலிபப் பிராயத்தவன். பார்க்க இலட்சணமாயிருக்கிறான். வாட்ட சாட்டமாகவும் இருக்கிறான். முகத்தில் கம்பீரம் இருக்கிறது. ஆனால் அவளுடைய இதய அந்தரங்கத்தில் குடிகொண்டிருக்கும் அந்த இன்னொரு முகத்தின் அழகும் கம்பீரமும் எங்கே? இவனுடைய முகம் எங்கே? பார்க்கப் போனால், இவனுடைய முகம் மரப் பொந்தில் இருக்கும் ஆந்தை முகம் மாதிரியல்லவா சப்பட்டையாயிருக்கிறது?

குதிரையின் மேல் வந்த இருவரில் முதலில் வந்தவன் நமது பழைய நண்பனாகிய வல்லவரையன் வந்தியத்தேவன் தான். பின்னால் வந்தவன் வைத்தியருடைய மகன். இருவரும் பழையாறையிலிருந்து இங்கே வந்து சேருவதற்குள் இளைத்துக் களைத்துச் சோர்வுற்றுப் போயிருக்கிறார்கள். ஆயினும் வந்தியத் தேவனுடைய முகம் கோயில் மதின் மேல் காலை நீட்டிச் சாய்ந்து கொண்டிருந்த பூங்குழலியைக் கண்டதும் சிறிது மலர்ந்தது. அவள் தன்னுடைய முகத்தை உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கிறாள் என்று தெரிந்ததும் அவனுக்கு இயற்கையான உற்சாகமே பிறந்து விட்டது. அவனும் குதிரையை நிறுத்திவிட்டு அவளுடைய முகத்தை ஆர்வத்துடன் உற்றுப் பார்க்கலானான். தன் முகத்தை மரப் பொந்திலுள்ள ஆந்தையின் முகத்தோடு அவள் ஒப்பிடுகிறாள் என்று மட்டும் அவன் அறிந்திருந்தால் அவ்வளவு உற்சாகப்பட்டிருக்க முடியாது தான். ஒருவர் மனத்தில் உள்ளதை இன்னொருவர் முழுதும் அறிய முடியாமலிருப்பது எவ்வளவு அநுகூலமாக இருக்கிறது!

குதிரை மேல் வந்தவன் தன்னை உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கிறான் என்பதைப் பூங்குழலி அறிந்தாள். கையில் தான் தேங்காய் மூடி வைத்துக்கொண்டு பல்லினால் கறண்டித் தின்று கொண்டிருப்பதையும் நினைத்தாள். உடனே எங்கிருந்தோ ஒரு நாண உணர்ச்சி வந்து அவளைப் பற்றிக் கொண்டது. பிராகார மதின் சுவரிலிருந்து வெளியே வெண் மணலில் குதித்தாள். மதின் சுவர் ஓரமாக ஓடத் தொடங்கினாள்.

அதைப் பார்த்தவுடனே வந்தியத்தேவனுக்கும் குதிரை மேலிருந்து குதிக்கத் தோன்றியது. குதித்துப் பூங்குழலியைப் பின்தொடர்ந்து பிடிப்பதற்கு ஓட வேண்டும் என்றும் தோன்றியது. அவ்வாறே அவளைத் துரத்திக் கொண்டு ஓடினான்.

இந்த அர்த்தமற்ற செயலின் காரண காரியங்களை யார் கண்டு பிடித்துச் சொல்ல முடியும்? ஆயிரம் பதினாயிரம் ஆண்டுகளாகத் தொடர்ந்து வந்த மனித குலத்தின் பரம்பரை இயற்கை தான் பூங்குழலியை ஓடச் செய்தது என்றும், அதுவே வந்தியத்தேவனைத் துரத்திப் பிடிக்கச் செய்தது என்றும் சொல்ல வேண்டியதுதான். **(தொடரும்)**

# சிங்கார்
## குங்குமம்



உங்கள் மேனி வண்ணத்திற்கும், சேலைக் கலர்களுக்கும் இசைவான பல நிறச்சாயல்களில் கிடைக்கும் சிங்கார் குங்குமம், உங்கள் எழிலுக்கு எழில் கூட்டி முகத்திற்குப் பொலிவைத் தருகிறது.

அது எடுப்பான ப்ளாஸ்டிக் குப்பிகளில் அல்லது ட்யூபுகளில் கிடைக்கிறது.



Bottle design Registered
Patent No: 128338

***PIPIS PRODUCTS***

விசாரணைகளுக்கு எழுதவும்: பாரமவுண்ட் ப்ராடக்ட்ஸ்
A - 30 - ஸ்ரீ ராம் இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், G. D. அம்பேத்கார் ரோடு, பம்பாய் - 31 DD.

# மலிவு வீடும் மாளிகையும்

ஒரே மனிதர் மலிவு வீடு கட்டவும் வழி காட்டுகிறார்; மாளிகைகளுக்குத் தேவைப் படக்கூடிய பளபளக்கும் மொசெய்க் கற்களையும் தயாரித்துத் தருகிறார். அவர்தான் ராவல் கிருஷ்ணய்யர்.

மொசெய்க் தரை அழகாக இருப்பது மட்டுமல்ல ! சாதாரண சிமெண்ட் தரையைவிட மொசெய்க் தளம் பன்மடங்கு உறுதியானது. காரணம், மொசெய்க் கற்கள் முப்பது டன் அழுத்தம் கொடுத்துத் தயாரிக்கப் பெறுகின்றன. இத்தாலியில் தயாரிக்கப் பெறும் மொசெய்க் கற்கள் உலகப் பிரசித்தி பெற்றவை. இப்பொழுது நம் நாட்டிலேயே தயாரிக்கப் பெறுவதால் இத்தாலியிலிருந்து இவை இறக்குமதியாவது நின்று விட்டது.

1932ல்தான் முதன் முதலாக மொசெய்க் கற்கள் தமிழ் நாட்டில் உபயோகத்துக்கு வந்தன. ராவல் டைல்ஸ் என்ற கம்பெனியார் சென்னையில் மொசெய்க் கற்கள் தயாரிக்க ஆரம்பித்தனர். இந்நிறுவனத்துடன் நீண்ட காலம் தொடர்பு கொண்டிருந்த திரு எஸ். கிருஷ்ணய்யர் (நாளடைவில் 'ராவல் கிருஷ்ணய்யர்' என்ற பெயரே இவருக்கு நிலைத்து விட்டது) 1940ல் சென்னையில் மொசெய்க் கற்கள் தயாரிக்கும் ஒரு தொழிற்சாலையை நிறுவினார். அண்மையில் வெள்ளி விழா கொண்டாடிய இந்நிறுவனம் (The Madras Cement Tiles & Concrete Products Co.) முதன் முறையாகப் பலவண்ண மொசெய்க் கற்கள் தயாரிப்பதில் வெற்றி கண்டுள்ளது. பச்சை, மஞ்சள் முதலான வெவ்வேறு வண்ணங்களில் பல அளவுகளில் மொசெய்க் கற்கள் பல இடங்களில் தயாரிக்கப்படுகின்றன. எனினும், ஒரே கல்லில் பல்வேறு வண்ணங்கள் திகழும்படி செய்த பெருமைக்குரியவர் 'ராவல்.'

''மேலை நாடுகளிலிருந்து இதற்கான வண்ணங்கள் (Pigments) இறக்குமதி செய்யப்பட வேண்டியிருப்பதாலும், வெள்ளை சிமெண்ட் விலை கூடுதலாக இருப்பதாலும் சாதாரண மொசெய்க் கற்களைவிட இப் புதிய பல வண்ணக் கற்களின் விலை சற்று அதிகமாகிறது'' என்கிறார் 'ராவல்'.

மொசெய்க் கற்கள் தயாரிக்க சிமெண்ட், மணல் இவை தவிர மொசெய்க் தூள்களும் சலவைக் கல் துண்டுகளும் தேவைப் படுகின்றன. இந்தச் சலவைக் கல் துண்டுகள் ஜய்ப்பூர், குண்டூர், கர்நூல் ஆகிய இடங்களிலிருந்து தருவிக்கப்படுகின்றன. சுவர் எழுப்புவதற்கு சிமெண்ட் கலவை தயாரிப்பது போல் ஒரு கலவை தயாரித்து, பின்னர் வெள்ளை சிமெண்ட், மொசெய்க் துண்டுகள் இவற்றால் இன்னொரு கலவை தயாரித்து இரு கலவைகளையும் ஒன்றன்மீது ஒன்றாகப் பரப்புகின்றார்கள். இதன் மொத்த கனம் ஒன்றேகால் அங்குலம். ஹைட்ராலிக் யந்திரத்தின் மூலம் முப்பது டன் அழுத்தம் கொடுத்த பிறகு கற்கள் இறுகி, முக்கால் அங்குலம் கனத்துக்குக் குறுகி விடுகின்றன. மொசெய்க் துண்டுகள் அடங்கிய பகுதி அடியிலும் சாதாரண சிமெண்ட் — மணல் கலவை அடங்கிய பகுதி மேல் பக்கமும் இருக்கும்படி சட்டங்களுக்குள் பொருத்தி அழுத்தம் கொடுப்பதால் சிமெண்ட் பால் வெளியேறி விடுகிறது. இக்கற்களைப் பின்னர் பல நாட்கள் தண்ணீரில் ஊறப் போட்டு 'க்யூர்' செய்த பிறகு வேறொரு சுழலும் இயந்திரத்தின் உதவியால் 'பாலிஷ்' செய்கிறார்கள். இயந்திரம் சுழலுகையில் மேலேயுள்ள ஒரு வாளியிலிருந்து பொடி மணல் கீழே விழுந்த வண்ணம் இருக்கிறது. அதே சமயம் ஒரு குழாயிலிருந்து நீரும் கொட்டிக் கொண்டிருப்பதால் சுழலும் இயந்திரம் முழுவதும் மணல் பரவுகின்றது. இப்பொடி மணல், மொசெய்க் கல்லில் இலேசாக வெளியே நீட்டிக் கொண்டிருக்கும் சலவைக் கல், மொசெய்க் துண்டுகளைத் தேய்த்துச் சமன் செய்து விடுகிறது.

எழுபது வயதான கிருஷ்ணய்யர் நாற்பத்தைந்து ஆண்டுகளுக்கும் மேலாகக் கட்டடக் கலையில் குன்றாத ஆர்வத்துடன் கவனம் செலுத்திப் பணியாற்றி வருகிறார். குறைந்த விலையில் வீடு கட்டும் சாதனையை நிகழ்த்திய தன் பொருட்டு இவருக்குப் பாரத அரசாங்கத்தின் ஆதரவில் இயங்கி வரும் புதிய கண்டுபிடிப்புக்களை ஊக்குவித்துப் பாராட்டும் வாரியம் (Inventions Promotion Board) ரூ. 1000 பரிசு வழங்கிக் கௌரவித்துள்ளது. மலிவான வீடு என்பதால் இது தரக் குறைவான வீடு அல்ல. அஸ்திவாரம் போடுவதிலிருந்து, சுவர் எழுப்புதல், சாளரங்கள், மேல் தளம், தரை — இவை ஒவ்வொன்றிலும் புதிய முறைகளைக் கையாண்டு வெற்றியடைந்துள்ளார்.

''தொடர்ந்து படிக்கப் போதிய வசதி இல்லாமையால் 1918இல் நான் சென்னைக்கு வந்து தொழில் துறையில் ஈடுபட்டேன்'' என்று கூறும் கிருஷ்ணய்யர் உழைப்பினால் உயர்ந்தவர். மேலை நாடுகளுக்குச் சென்று கட்டடக் கலை நுணுக்கங்களைப் பயின்று வர ஐ. நா. நிறுவனத்தின் உதவி இவருக்குக் கிட்டியுள்ளது. ஆராய்ச்சி மனப்பான்மையுள்ள திரு கிருஷ்ணய்யருக்கு இந்த வாய்ப்பு பெரிதும் பயன்படும்.

—'பாணன்'

குன்றாத ஆர்வத்துக்குப் பாராட்டு : பொன்னாடை பெறுபவர் ஸ்ரீ கிருஷ்ணய்யர். போர்த்துபவர்: ராஜா சர் முத்தையா செட்டியார்.






எல்லா வகைப் புடவைகளும் பாம்பே டையிங் கடைகளில் கிடைக்கும்

பல்வேறு மாதருக்கேற்ற பலவகைப் புடவைகள்:
விரும்புவதைத் தேர்ந்தெடுங்கள்!




கண்ணைப் பறிக்கும் வண்ணங்கள்; மனதைக் கவரும் டிசைன்கள்; சுருக்கங்கள் விழாத தன்மை. இத்தனை சிறப்புகளும் பாம்பே டையிங்கின் எண்ணற்ற புடவை வகைகளில் காணலாம். இந்த மேன்மையான புடவைகள் உங்கள் அழகுக்கு மெருகூட்டி, உங்கள் மதிப்பைப் பன்மடங்கு பெருக்கும். இன்றே பாருங்கள்; இன்றே வாங்குங்கள் !

## பாம்பே டையிங்

BD-8048

மகாபாரதம்

ராஜாஜி

## 87. கர்ணனும் பீமனும்

அபிமன்யுவுக்குத் துணை செய்யப் போன பாண்டவர்களைத் தடுத்து அவன் வதத்துக்கு முக்கிய காரணமான ஜயத்ரதனைப் போருக்கு அழைப்பதற்காகப் போன அருச்சுனன் திரும்பி வராததால் யுதிஷ்டிரன் கவலைப்பட்டு சாத்யகியையும் பிறகு பீமனையும் அனுப்பினான். பீமன் போய்ச் சேர்ந்து தனஞ்சயன் உயிரோடு இருக்கிறான் என்பதற்கு அறிகுறியாக உரக்கக் கர்ஜித்ததன் பேரில் யுதிஷ்டிரன் ஆறுதலும் தைரியமும் அடைந்தான்.

ஒருபுறம் சாத்யகிக்கும் பூரிசிரவசுக்கும் மற்றொருபுறம் கர்ணனுக்கும் பீமனுக்கும் வேறொரு புறத்தில் அருச்சுனனுக்கும் ஜயத்ரதனுக்கும் அதுவரையில் பார்க்காததும் கேட்காததுமான போர்கள் நடந்தன. துரோணர், பாஞ்சாலரும், பாண்டவர்களும் செய்து வந்த எதிர்ப்பைத் தாங்கியும் அவர்கள் பேரில் எதிர்த் தாக்குதல் செய்து கொண்டும் போர் நிலையின் முதல் வியூகத்திலேயே நின்றார். அருச்சுனன் ஜயத்ரதனை எதிர்த்த இடத்துக்குத் துரியோதனன் வந்து சேர்ந்தான். அவனும் தோல்வியடைந்து புறங்காட்டித் திரும்பினான்.

இவ்வாறு யுத்தம் பல பகுதிகளில் தீவிரமாக நடைபெற்றது. இரு திறத்தாருக்கும் ஆங்காங்கு முன்புறமும் பின்புறமும் இரண்டு புறத்திலும் அபாயம் இருந்து வந்தது. அப்போது துரோணரிடம் துரியோதனன் வந்து, ''அருச்சுனனும் பீமனும் சாத்யகியும் இந்தச் சேனையை அலட்சியம் செய்து விலகிச் சென்று சிந்து ராஜனை நெருக்கி விட்டார்கள். அங்கே கடும் போர் நடைபெற்று வருகிறது. உம்முடைய தலைமையில் நின்று நம்முடைய வியூகம் இப்படி உடைபட்டு நாம் எண்ணிய எண்ணம் நிறைவேறாமல் கெட்டுப் போனது ஆச்சரியமாக இருக்கிறது. தனுர் வேதத்தின் கரையைக் கண்ட துரோணர் எவ்வாறு தோற்கடிக்கப்பட்டார் என்று எல்லோரும் கேட்கிறார்கள். நான் என்ன சொல்வேன்? உம்மால் நான் துர்ப்பாக்கியன் ஆனேன்'' என்று துரோணரை வழக்கம்போல் தாக்கிப் பேசினான்.



''நீ என்னை நிந்திப்பது எல்லாம் உண்மைக்கும் தருமத்துக்கும் விரோதம். சென்று போனதைப் பற்றிப் பேசிக்கொண்டிருப்பதில் பயன் இல்லை. மேலே செய்ய வேண்டியதைப் பற்றி யோசிப்பாயாக!'' என்றார் துரோணர்.

''எது செய்ய வேண்டுமோ அதை நீரே ஆலோசித்துச் சொல்லும். நன்றாக ஆலோசித்து முடித்த தீர்மா



ணத்தை விரைவாகவும் செய்து முடிக்க வேண்டும்'' என்றான் கவலை கொண்டு மதியிழந்த துரியோதனன்.

''அப்பனே! ஆலோசிக்க வேண்டிய விஷயம் பலவாறாக இருக்கிறது. மூன்று மகாரதர்கள் நம்மைத் தாண்டிச்சென்று விட்டிருக்கிறார்கள். அது உண்மை. ஆனால் அவர்கள் முன்னால் சென்றதன் காரணத்தால் நாம் பயப்படுவதைப் போலவே அவர்களுக்குப் பின்புறம் நாம் இருப்பது அவர்களுக்குப் பயத்துக்குக் காரணமாகவே இருக்கும். அவர்களுக்கு இரு புறமும் சத்துருக்களாகிய நாமும், நம்மைச் சேர்ந்தவர்களும் இருக்கிறோம். ஆதலால் நீ தைரியமாக ஜயத்ரதனுக்கு உதவியாகப் போய் அவ்விடம் செய்ய வேண்டியதைப் பார்த்துக் கொள். கவலைப்பட்டுச் சாவதில் பயனில்லை. நான் இவ்விடமே இருப்பது நலம். வேண்டும் போது இங்கிருந்து இன்னும் வீரர்களையும் படைகளையும் உனக்குச் சகாய

மாக அனுப்புவேன். பாஞ்சாலனையும் பாண்டவப் படைகளையும் இவ்விடம் நான் எதிர்த்து நிற்க வேண்டும்'' என்றார் துரோணர்.

ஆசார்யருடைய யோசனையின்படி துரியோதனன் சில படைகளையும் கூட்டிக்கொண்டு அருச்சுனன் யுத்தம் நடத்திக்கொண்டிருந்த இடத்துக்குத் திரும்பவும் போனான்.

தற்காலத்துப் போர் முறையில் ஒரு அத்தியாயம், பகைப் படைகள் அரண் செய்து கொண்டு நிற்கும் இடங்களைச் சில சமயம் அப்படியே விட்டு முன் செல்லும் முறை. அவ்வாறு பகைவர்களுடைய பலத்தை லட்சியம் செய்யாமல் முன் செல்வதன் லாப நஷ்டங்களை 1939ல் ஆரம்பித்த மகா யுத்தத்தில் இரு தரத்தாரும் ஆராய்ந்து செய்ததைப் போலவே பாரத யுத்தத்திலும் நடைபெற்றது. பதினான்காவது நாளில் எதிர்பாராத முறையில் அருச்சுனன் செய்த மகத்தான காரியங்களும் அதைப் பற்றித் துரோணர் துரியோதனனிடம் கலந்து ஆலோசித்ததும் இதுவேதான். சத்துருப் படை இருக்கும் இடத்தி லெல்லாம் போர் நடத்திக் கொண்டு கால விளம்பம் செய்யாமல், விட்டு விலகி, முன் செல்லும் போர் யுக்தியே ''பை—பாஸிங்'' என்று தற்காலத்தில் சொல்லப்படுவது. அந்த முறையை அருச்சுனன் சாமர்த்தியமாக உபயோகித்துத் துரியோதனனைத் தத்தளிக்கச் செய்தான்.

**பீ**மனுக்கும் கர்ணனுக்கும் அன்று நடந்த யுத்தம் ஒரு மயிர் சிலிர்க்கும் படியான கதை. பாரத யுத்தத்தைத் துரோண பர்வத்திலும் கர்ண பர்வத்திலும் படிக்கும்போது பல இடங்கள் சமீப காலத்திய உலக மகா யுத்தத்தின் பிரதிபிம்பமாகவே எல்லா விதத்திலும் காணப்படுகின்றன.

முதலில் தன்னை எதிர்த்த கர்ணனை விட்டு விட்டுப் பீமன் தனஞ்சயன் இருந்த இடத்துக்குப் போய்ச் சேரவே விரும்பினான். ஆனால் ராதேயன் விடவில்லை. பீமசேனன் மேல் அம்பு மாரி பொழிந்து அவனைத் தடுத்தான். தாமரைப் பூவைப் போன்ற அழகிய முகத்தைப் படைத்திருந்த கர்ணன் சிரித்துக் கொண்டு, ''ஓடாதே! முதுகைக் காட்டாதே!'' என்று பீமனை ஏளனமாகப் பேசித் துன்புறுத்தினான். கர்ணனுடைய சிரிப்பைப் பீமனால் சகிக்க முடியவில்லை. இருவருக்கும் கடுமையான யுத்தம் ஆரம்பித்தது. கர்ணன் சிரித்துக் கொண்டே செய்ய வேண்டிய எல்லா வேலைகளையும் செய்தான். பீமனோ, கோபாவேசமாகப் போர் புரிந்தான். கர்ணன் தூரத்தி லிருந்து கொண்டே தவறாத குறி வைத்து வில்லையும் பாணங்களையும் பிரயோகம் செய்வான். பீமன் தன் மேல் பொழியும் பாணங்களையும் நாராசங்களையும் லட்சியம் செய்யாமல் கர்ணனை நெருங்கிப் போவான். கர்ணன் சிரமமேயின்றிச் செய்வதைப் போல் காட்டிக் கொண்டு எல்லாவற்றையும் பிழை இல்லாமல் சாந்தமாகச் செய்வான். பீமன் அவமானத்தைப் பொறுதவனாகக் கோபம் மேலிட்டு, வியப்பைத் தரும்படியான முறையிலெல்லாம் தன் பலத்தைக் காட்டுவான்.

பீமசேனன் உடலெல்லாம் காயமடைந்து ரத்தம் ஒழுகி வசந்தகாலத்து அசோக மரத்தைப் போல் விளங்கினான். காயங்களை லட்சியம் செய்யாமல் கர்ணனுடைய தேரையும் குதிரைகளையும் வில்லையும் நாசம் செய்தான்.

கர்ணன் வேறு ரதத்தைத் தேடி ஓட வேண்டியதாயிற்று. வேறு ரதத்தில் ஏறிய கர்ணன் தனக்கு ஏற்பட்ட அவமானத்தினால் முகத்தில் இருந்த சிரிப்பு மாறிப் பருவ காலத்துக் கடலைப் போல் கோபம் பொங்கிப் பீமனை மறுபடியும் எதிர்த்தான். இருவரும் தேக பலத்தில் புலிகளைப் போலவும், விசையில் பருந்துகளைப் போலவும், கோபத்தில் சர்ப்பங்களைப் போலவும் ஒருவர் மேல் ஒருவர் பாய்ந்து யுத்தம் செய்தார்கள். தனக்கும் தன் சகோதரர்களுக்கும் மனைவி துரௌபதிக்கும் ஏற்பட்ட அவமானங்களும் துன்பங்களுமெல்லாம் அந்தச் சமயம் பீமனுக்கு நினைவு வந்தது. உயிரை வெறுத்து யுத்தம் செய்தான். இரண்டு தேர்களும் ஒன்றை யொன்று மோதின. கர்ணனுடைய பால் வண்ணக் குதிரைகளும் பீமனுடைய கருங் குதிரைகளும் மேகங்கள் கலப்பதுபோல் ஒன்றோடொன்று நெருங்கிக் கலந்தன.

கர்ணனுடைய வில்லானது அறுபட்டது. சாரதி அடிபட்டுத் தேரினின்று கீழே விழுந்தான். அப்போது கர்ணன் ஒரு சக்தியாயுதத்தை எடுத்துப் பீமன் பேரில் வீசினான். பீமன் அதைத் தடுத்து விட்டு வேறு அம்புகளைத் தன் வில்லில் தொடுத்தான். கர்ணனும் புதியதொரு வில்லை எடுத்துப் பீமன் மேல் சரமாரி பொழிந்தான். மறுபடியும் கர்ணன் தேரை இழந்தான்.

துரியோதனன் கர்ணனுடைய கஷ்டமான நிலையைப் பார்த்துத் தம்பி துர்

ஜயனை அழைத்து, ''பாபிஷ்டனான பாண்டவன் கர்ணனைக் கொல்லப் போகிறான். நீ உடனே சென்று பீமனை எதிர்த்துக் கர்ணன் உயிரைக் காப்பாயாக!'' என்றான். துர்ஜயனும் அந்தக் கட்டளைப்படி பீமனை எதிர்த்தான். விருகோதரன் கோபம் கொண்டு ஏழு பாணங்களை விட்டுத் துர்ஜயனையும் குதிரைகளையும் சாரதியையும் யமலோகத்துக்கு அனுப்பினான். நிலத்தில் அடிபட்ட பாம்பு போல் புரண்டுகொண்டிருந்த துர்ஜயனைப் பார்த்துக் கர்ணனுக்குத் தாங்கவில்லை. கண்ணீர் விட்டு அழுது விழுந்து அவனைப் பிரதட்சணம் செய்தான். பீமனோ யுத்தத்தை விட்டு விலகவில்லை. மறுபடியும் கர்ணனை அம்புக் கூட்டங்களாலும் பாணங்களாலும் நன்றாக அடித்துத் துன்புறுத்தினான்.

தேரை இழந்த கர்ணன் வேறொரு தேரில் ஏறித் திரும்பவும் பீமனை எதிர்த்தான். அவன் செலுத்திய அம்புகள் பீமனை நன்றாகத் தாக்கின. கோபாவேசமாகக் கதாயுதத்தை எடுத்துப் பீமன் வீசி எறிந்தான். அது கர்ணனுடைய சாரதியையும் குதிரைகளையும் கொன்று கொடிக் கம்பத்தையும் உடைத்தது. கர்ணன் குதிரை இழந்து தேரை விட்டு இறங்கி வில்லை எடுத்துக்கொண்டு பூமியில் நின்றான்.

இதை யறிந்த துரியோதனன், ''ராதேயன் பீமசேனனால் ரதத்தை மறுபடியும் இழந்தான். உன் ரதத்தில் ஏற்றிக்கொள்'' என்று மற்றொரு தம்பி துர்முகனுக்குக் கட்டளையிட்டான். துர்முகனும் தன் தேரைக் கர்ணன் நின்ற இடத்துக்குச் செலுத்தினான்.

திருதராஷ்டிர புத்திரர்களில் மற்றொருவனும் வந்தான் என்று பீமன் மகிழ்ச்சி யடைந்து, உதட்டை நக்கிக் கொண்டு துர்முகன் பேரில் ஒன்பது பாணங்களை விட்டான். கர்ணன் அந்த ரதத்தின் மேல் ஏறிய அதே சமயத்தில் துர்முகன் கவசமுடைந்து உயிரற்று வீழ்ந்தான். ரத்தத்தால் நனைக்கப்பட்டு வீழ்ந்து கிடந்த துர்முகனைக் கண்ட கர்ணன் கண்களில் நீர் ததும்ப ஒரு முகூர்த்த காலம் யுத்தம் செய்யாமல் அப்படியே நின்றான். பீமன் அப்போதும் யுத்தத்தை நிறுத்தாமல் மறுபடியும் கர்ணன்மேல் கூரிய பாணங்களை எய்தான். அவை ராதேயனுடைய கவசத்தைப் பிளந்து மிகவும் துன்புறுத்தின. உடனே அவனும் பீமனை எதிர்த்துப் பாணங்களை எய்து பீமன் உடலில் பல இடங்களில் காயப்படுத்தினான். பீமனும் அதைப் பொறுத்துக் கொண்டு மறுபடியும் கர்ணனைப் பலமாகத் தாக்கினான். காயங்களின் வேதனையினாலும் துரியோதனனுடைய தம்பிகள் தனக்காக ஒருவர் பின் ஒருவராக மாண்டதாலும் துக்கம் தாங்க முடியாமல் கர்ணன் தைரியம் இழந்து யுத்த அரங்கத்தை விட்டு விலகிப் போனான்.

அப்போது பீமன் பல காயங்கள் பட்ட தேகத்தோடு கொழுந்து விட்டெரியும் நெருப்பைப் போல் யுத்த பூமியில் நின்று கொண்டு வெற்றிக் கர்ஜனை செய்தான். அதைக் கேட்டதும் பொறுக்க முடியாமல் கர்ணன் யுத்த பூமியை விட்டுப் போகும் எண்ணத்தை மாற்றிக் கொண்டு திரும்பி வந்து நின்றான். **(தொடரும்)**

---

## ...மலைபோல் குவியும் கடிதங்கள்!

அமெரிக்காவில் சட்டமாக விருக்கும் குறிப்பிட்ட ஒரு மசோதாவை ஆதரிக்கும் அல்லது எதிர்க்கும் குழுக்கள் வாக்காளர்களைச் சட்டமன்றப் பிரதிநிதிக்கு எழுத அடிக்கடி வற்புறுத்துவதுண்டு. மிகக் கடுமையான எதிர்ப்புக்கு உள்ளாகியுள்ள ஒரு மசோதா காங்கிரஸின் (அமெரிக்கப் பாராளுமன்றம்) பரிசீலனையில் இருக்கும்போது காப்பிட்டால் கட்டிடத்துத் (காங்கிரஸ் கூடும் இடம்) தபால் அறைக்கு வாக்காளர்களிடமிருந்து டன் கணக்கில் தபால்கள் வந்து குவியும்!





# கௌரவச் சண்டை




எனக்கும் பக்கத்து வீட்டுப் பார்த்தசாரதிக்கும் பெரிய தகராறு. பூசலுக்கு அடிப்படைக் காரணம்: முருங்கை மரம். எங்கள் வீட்டு முருங்கை மரம் நன்றி கெட்ட ஒன்று. இங்கே நான் ஊற்றுகிற தண்ணீரை ஏப்பம் விட்டு விட்டு, பக்கத்து வீட்டில் போய்த் தலை நீட்டியிருக்கிறது. அதுவாவது போகட்டும்; அந்தப் பக்கம் இருந்த கிளைகள் ஓரவஞ்சனை போல் பூத்துக் குலுங்கி, காய்த்து வைப்பானேன்?

அடை அடையாக எங்கள் வீட்டு முருங்கை மரத்தில் கம்பளிப் பூச்சிகள் வந்து குவியத் தொடங்கின. குறைந்த பட்சம் ஆயிரம் பூச்சிகளாவது இருக்கும். இதிலே எழுநூற்றுக்கு மேற்பட்ட பூச்சிகள் கொரில்லாப் படையினர் ஊடுருவுவது போல் ஓசைப்படாமல் பார்த்தசாரதியின் வீட்டுப் பக்கம் போய்ச் சேர்ந்தன. இதற்கு நான் எந்த விதத்தில் பொறுப்பாளியாக முடியும்? ஆனால் அவரோ நான்தான் அவற்றைத் தூண்டி(!) விட்டிருக்க வேண்டுமெனச் சந்தேகப்பட்டார்.

''சார்! உங்களாலே எனக்கு அநாவசியத் தொல்லை. கம்பளிப் பூச்சி உபத்திரவம் சகிக்க முடியவில்லை. இதற்கு ஏதாவது பண்ணினீர்களானால் தேவலை!...'' என்றார்.

''என்ன பண்ணச் சொல்கிறீர்?''

''தீப்பந்தம் காட்டுங்கள் சார், மரத்துக்கு... சிரமமில்லாத வேலை!''

''நன்றாயிருக்கிறதே நீர் சொல்வது! மரம் பட்டுப் போய் விடும் சுவாமி!...'' என்று சொல்லிக் கழன்று கொண்டு விட்டேன்.

திடுமென்று ஒரு நாள் அவர் நக்ஸல்பாரி கணக்காக அரிவாளும் கையுமாகப் புறப்பட்டுத் தம் வீட்டுப் பக்கமிருந்த கிளைகளை வெட்டி வீழ்த்தி விட்டார். கம்பளிப் பூச்சிகளை விரட்டுவதுடன் அவருக்கு வேறொரு நோக்கமும் இருந்ததென்று என் மனைவி கருதினாள். அதாவது பார்த்தசாரதியின் வீட்டுக்கு அன்று வந்திருந்த விருந்தாளிகளுக்கு முருங்





கைக்காய்ச் சாம்பாருடன் விருந்து பண்ணிப் போடுவதற்காகவே அவர் கிளையை வெட்டியதாக இவள் ஊகம்.

''ஏன் ஐயா, நீர் பண்ணியது உமக்கு நன்றாக இருக்கிறதா?'' என்று மரியாதையுடன் நான் ஆரம்பித்த வாக்குவாதம், ''மூளை கெட்ட மனிதன்!'' என்ற முத்தாய்ப்புடனும், ''திமிர் பிடித்த ராஸ்கல்!'' என்ற அவருடைய முடிவுரையுடனும் தாற்காலிகமாக ஓய்ந்தது.

தெருவாசிகள் இரண்டு கட்சிகளாகப் பிரிந்து ஆதரவு காட்டவும் தொடங்கினார்கள். இதன் விளைவாகத் தாக்குதல்களும் (அதாவது உடைந்த கண்ணாடித் துண்டு, பிளேடுகள், துருப்பிடித்த ஆணிகள் ஆகியவற்றை நான் அந்த வீட்டுப் பக்கம் எறிவதும்) எதிர்த் தாக்குதல்களும் (நான் வீசியெறிந்ததுடன் பத்து சத விகிதம் கூட்டி அவர் இந்தப் பக்கம் 'கடாசு'வதும்) அதிகரித்தன.

இந்தச் சந்தர்ப்பத்தில்தான் இருவருக்கும் பொதுவான நண்பராக நாராயணன் எங்களைச் சமாதானம் செய்து வைக்க முன் வந்தார். ''நடந்ததை மறந்து சமாதானமாகப் போங்கள்'' என்று அறிவுரை வழங்கினார். ''அவன் முதலில் என் முருங்கைக் காய்களையெல்லாம் திருப்பித் தரட்டும்...'' என்றேன் நான். ''அவன் முதலில் முகக் கட்டைகளையெல்லாம் வாபஸ் பெற வேண்டும்'' என்பது பார்த்தசாரதியின் வாதம். ''ஏன் வம்பு? இரண்டு பேருமே ஏக காலத்தில், ஓரிடத்தில் சந்தித்துப் பேசிவிட்டால் போயிற்று'' என்று வழி சொல்லிக் கொடுத்த நாராயணன், என்னைப் பக்கத்து வீட்டுக்கு வரும்படி அழைத்தார். துண்டை எடுத்துப் போட்டுக்கொண்டு கிளம்பப் போனவனைத் தடுத்தாள் என் தர்மபத்தினி. ''தப்புத் தண்டா பண்ணினவர் அந்த மனுஷன்! அவர் இங்கே வருவதை விட்டு விட்டு நீங்க அங்கே போவதாவது! வெட்கக் கேடு!'' என்று உபதேசம் பண்ணினாள்.

நண்பர் நாராயணன் அடுத்த வீட்டுக்குப் போய்ப் பார்த்தசாரதியை அழைத்ததும் அவர் மனைவி ''என்ன நீங்கள் எதற்காக அங்கே போகணும் என்கிறேன். தப்பு முழுக்க முழுக்க அவர்களுடையது! அக்கறையிருந்தால் அந்த ஆசாமி இங்கே வரட்டும்!'' என்று சீறிய சீறல் தெரு முழுதும் கேட்டது.

இருவருக்கும் பொதுவாக நாராயணனுடைய வீட்டில் சந்திப்பதென்று முடிவாகியது. இதிலும் ஒரு சங்கடம் முளைத்தது. யார் முன்னாடியே வீட்டை விட்டுக் கிளம்பிப் போய் மற்றவருக்காகக் காத்திருப்பது? காத்திருப்பவன் ஏதோ குற்றவாளிபோல அல்லவா மற்றவர்கள் கண்களுக்குக் காட்சியளிப்பான்?

கடைசியில் நானும் பார்த்தசாரதியும் ஒரே சமயத்தில்தான் அவரவர் வீட்டை விட்டுப் புறப்பட்டோம். அப்படியும் நண்பரின் வீட்டுக்குள் யார் முதலில் நுழைவது என்கிற பிரச்னை வந்து விட்டது. ''இவன் தான் நுழையட்டுமே!'' என்று நான் காத்திருக்க, பார்த்தசாரதியும் அதே எண்ணத்துடன் படிக்குறட்டிலேயே நின்றார்.

நாராயணன் நல்ல வேளையாக ஓடி வந்து எங்கள் இரண்டு பேரையும் ஒன்றாக வீட்டுக்குள் அழைத்துப் போனார். உள்ளே போன பிறகோ நாற்காலியில் உட்காருவதில் ஒரு பிரச்னை. நண்பர் வீட்டு நாற்காலிகளில் ஒன்றுக்குத்தான் கைகள் உண்டு. இன்னொன்று கையில்லாத நாற்காலி. பார்த்தசாரதி கையுள்ள நாற்காலியில் அமர நான் கையில்லாத நாற்காலியில் உட்காருவது கௌரவக் குறைவு அல்லவா எனக்கு?

பார்த்தார் நாராயணன். இருவரையும் நிற்க வைத்தே, புரோகிதர் மந்திரம் சொல்வது போல் சொல்லி எங்களைத் திருப்பிச் சொல்ல வைத்து அனுப்பினார்.

வீட்டுக்கு வரும்போது நினைத்துக் கொண்டே வந்தேன். என்னவென்று?

வியட்நாம் யுத்தத்தை நிறுத்தப் பேச்சு வார்த்தைகளுக்கான நகரைத் தேர்ந்தெடுப்பது பற்றியும், இடத்தைத் தேர்ந்தெடுத்த பிறகு அங்கே யார் யார் எங்கெங்கே உட்காருவது, மேஜையின் நீள அகலங்கள் எப்படி இருக்க வேண்டும் என்பதையெல்லாம் பற்றியும் அமெரிக்காவும் ஹனாயும் மண்டையை உடைத்துக்கொண்டதைக் குறித்துத்தான் எண்ணிக் கொண்டு வந்தேன்.

மகராஜன்களாக இருக்கட்டும். சமாதானப் பேச்சு வார்த்தை நடக்கும்போதே ஒன்றுமில்லாத விஷயத்துக்கெல்லாம் நிறையக் கௌரவச் சண்டை போடட்டும். அப்படியெல்லாம் அவர்கள் செய்யாமல் ஒத்துப் போனால் அப்புறம் என்போன்றவர்களின் சில்லறைச் சண்டைகளுக்கு என்ன மதிப்பு?

— எஸ். வி. ஆர்.

## ஸ்ரீமதி நல்லமுத்து ராமமூர்த்தி

நேற்றும் நாளையும்

# கல்லூரி நாட்கள்

'கவர்ன்மென்ட் காலேஜ் ஃபார் வுமன்' என்பதே பின் நாளில் ராணி மேரி கல்லூரியாயிற்று. அதில் முதல் செட்டில் நான் ஒரு மாணவி.

முதல் வருஷம் சுமார் இருபத்தைந்து மாணவிகளே இருந்தோம். இரண்டாவது வருஷத்திலிருந்து நான் அங்கேயே ஹாஸ்டலில் சேர்ந்தேன். சூழவும் சுடுகாடு. இரவில் சிதை எரிவது தெரியும். நரி ஊளையிடுவது கேட்கும். எங்கள் மேனி நடுங்கும் !

பி. ஏ. படித்த போது பதினொன்கு ரூபாய் உபகாரச் சம்பளம் கிடைத்தது. ஹாஸ்டல் செலவு பதினொன்கு ரூபாய்தான்.

பிரின்ஸிபால் மிஸ் டிலாஹே அன்பும் கண்டிப்பும் நிறைந்தவள். மாலையில் எல்லாருமே விளையாடியாக வேண்டும். இரவில் பத்து மணிக்குமேல் விளக்கு எரியக் கூடாது. அதை மீறி நான் பாத்ரூம் வெளிச்சத்திலோ, மாடிப்படி விளக்கிலோ படிப்பதைப் பார்த்தால், அன்புடன் கண்டித்து, படுக்க அனுப்புவார். எதுவும் சுத்தமாக இருக்க வேண்டும். பகட்டாகவும் ஊதாரித்தனமாகவும் இருக்கக் கூடாது. ஒவ்வொரு பெண்ணைப் பற்றியும் முழு விவரமும் அறிந்திருப்பார். பெற்றோரைப் பார்க்கும்போது தகுந்த யோசனை சொல்லுவார்.

என் தாயாருக்கு நான் கடைக்குட்டி, செல்லம். அவள் காலமானபோது நான் பைத்தியம் பிடித்தவள் போல் தவித்துப் போனேன். அந்த நாளில், தினம் இரண்டு மணி நேரம் போல என்னைத் தனியே அழைத்துப் போய் மிஸ் டிலாஹே ஒரு தேவதை போல் ஆறுதலைக் கூறினார்.

ஹாஸ்டலை விட்டு வெளியே போவது என்றால் ரொம்பக் கண்டிப்பு. போனால், மாலை ஆறு மணிக்குள் வந்துவிட வேண்டும். இரவு பத்து மணிக்கு எல்லாக் கதவுகளையும் அடைத்து விடுவார்கள். இதையும் மீறி, சுவர் ஏறிக் குதித்து அகப்பட்டுக் கொண்டு வெளியே விரட்டப்பட்ட பேரும் அபூர்வமாக இருந்தார்கள் !

ஆரம்பத்தில், ஐரோப்பியர், பிராமணர், அல்லாதார், நியர் என்று தனித் தனி சாப்பாட்டு அறை இருந்தது. மணையில் அமர்ந்து இலையில் சாப்பாடு; அப்புறம் இலை போய்த் தட்டு வந்தது. சாதி வேற்றுமை இல்லாமல் சைவம் அசைவம் என்று இரண்டே பிரிவில் வகைப்படுத்தி, எல்லாரும் ஒரே ஹாலில் சாப்பிடும் பழக்கம் வந்தது. பின்னால் இதே கல்லூரியில் நான் பிரின்ஸிபாலாக இருந்த போதுதான்.

கல்லூரியில் நாடகம் போட்டு நிதி சேர்க்கத் தொடங்கினோம். பல நல்ல பணிகளை நிறைவேற்றினோம். சேரிக் குழந்தைகளுக்கு ஒரு பள்ளிக்கூடம் கட்டினோம்.

ஹானர்ஸ் படித்தபோது பிரசிடென்சியில் சேர்ந்தேன். பெண்களுக்குத் தனி அறை ஒன்று இருந்தது. அங்கே போய் உட்கார்ந்து கொண்டு, ''சார் வந்துவிட்டார்'' என்று பியூன் வந்து சொன்னதும், அவன் துணையுடன் வகுப்பு அறைக்குள் செல்வேன். என் வகுப்பில் நான் ஒருத்திதான் பெண். எனக்குத் தனி டெஸ்க்.

அந்த நாள் மாணவருக்கும் தேச பக்தி, மொழிப் பற்று எல்லாம் உண்டு. அதை வெளிப்படுத்திய விதம் வேறு. ஒரு சமயம் டெல்லி தர்பாருக்கு லீவு விட்டார்கள். திருக்கார்த்திகையன்று வேண்டுமென்றே பள்ளிக்கூடம் வைத்து, பரீட்சையும் நடத்தினார்கள். கிறிஸ்தவர் உள்பட ஒரே கட்டுப்பாடாக இருந்து, நாங்கள் பரீட்சை எழுதவில்லை. பெஸன்ட் என்றால் எங்களுக்கு ஒரு பித்து. அவர் ஊர்வலம் கல்லூரி வழியாக வந்தபோது கல்லூரித் தடையை மீறி, வாசலுக்குப் போய் அவர் மீது மலர் தூவி விட்டு வந்தோம்.

இன்றைக்கு மாணவர் கவனம் பலவிதத்தில் சிதறி விடுகிறது. படிக்கத் தூண்டி, ஒழுக்கத்தில் வழிகாட்டி, கூடப் பழகும் நண்பர்களாக விளங்க ஆசிரியர்களால் இயலவில்லை. கல்விக்கே முழுமையாகத் தம்மை

அர்ப்பணித்துக் கொண்டிருப்போர் தொகை இத்தலைமுறையில் குறைந்து வருகிறது.

## திரு எஸ். குருமூர்த்தி

கல்லூரி வாழ்வில் எனக்கு இது நாலாவது வருஷம். கிரிக்கெட் கோஷ்டியில் காப்டனாக இருந்திருக்கிறேன். சித்திரம் வரைகிறேன். கல்லூரி மாணவர் மன்றத் தேர்தலில் நின்றேன். ஜயித்தவனைப் பாராட்டினேன்! வீட்டில் பொறுப்பாக இருக்கிறேன். எதிர் காலத்தைப் பற்றிக் கவலையும் நம்பிக்கையும் கலந்து சிந்திக்கிறேன், தனிமையில்.

நாலு மாணவர்கள் கூடியிருக்கையில் நிலைமையே வேறு. எவ்வளவு பொறுப்பான பையனும் நாலு பையன்களுடன் இருக்கையில் கோஷ்டி – உணர்வு பெற்று விடுகிறான். இல்லாவிட்டால் அவன் பிறர் கிண்டலுக்கு ஆளாகிறான். ஏதோ காரணத்துக்காக எதுவோ ஒன்று ''ஒழிக !'' கோஷம் வலுக்கிறது. எனக்குத் தெரியாமல் நானும் கூச்சலிடத் தொடங்கி விடுகிறேன் !

இரண்டு பேர் தனியாக சினிமா போனால் கலாட்டா இல்லை. ஒரு கோஷ்டியாகச் சேரும் போது நாம் மற்றவரைப் போல் அல்ல, மாறானவர்கள் என்ற உணர்ச்சி ஏற்பட்டு விடுகிறது. அப்போது நடத்தையும் வேறாக இருக்கிறது. எல்லாருக்கும்தான் தெய்வ நம்பிக்கை இருக்கிறது. நான் தினம் கோயிலுக்குப் போகிறேன். ஆனால் வெளிப்படையாக நாலு பேருக்கு நடுவே ஒருவன் பட்டையாகத் திருநீற்றுடன் வந்தால், 'என்னடா, சாமியாரே !' என்கிறோம். வகுப்பில் அக்கறையாய் ஒரு மாணவன் எழுந்து ஒரு சந்தேகம் கேட்டு, ஆசிரியரும் அதற்குப் பொறுப்பாகப் பதில் சொல்லத் தொடங்கினால் மற்றவர்களின் பரிகாச ஒலி எழுகிறது.

இரண்டாயிரம் மாணவரிடையே போதிக்கும் நூற்றைம்பது ஆசிரியர்களிடையே டிபார்ட்மென்டுக்கு இரண்டு மூன்றுபேர் சிறப்பாக மதிக்கப்படுகிறார்கள். அவர்கள்தான் மாணவர்களுக்கு உண்மைத் தோழராக இருந்து அவர்கள் முன்னேற்றத்தில் அக்கறை காட்டுகிறார்கள். பாடம் தவிர பிற விஷயங்களிலும் பொறுப்பான ஆலோசனை கூறுகிறார்கள்.

என். ஸி. ஸி. நடந்தபோது எங்களை அறியாமலே ஒரு டிஸிப்ளின் இருந்தது. உடல் உழைப்புக்கு வாய்ப்பு இருந்தது.

காலேஜுக்குக் காலேஜ் சச்சரவு என்பதில் ஊன்றிப் பார்த்தால், இரண்டு தனிப்பட்ட மாணவர்களுக்கு இடையிலேதான் சண்டை ஆரம்பித்தது என்பது தெரியும். 'சொந்த நாடு' என்பது போல் 'சொந்த காலேஜ்' என்று ஒரு ரோஷம் பொத்துக் கொண்டு வந்து விடுகிறது !

மாணவர்கள் பலரும் ஒழுக்கத்தைப் பேணுகிறார்கள். இது பிரக்ஞை இராமலே நடக்கிறது. சிகரெட் பிடிக்கும் பழக்கம் இருப்பவன் வெளியே எப்படியானாலும், மனத்துக்குள் மற்றவரைவிடத் தன்னைத் தாழ்ந்தவனாக நினைக்கிறான். மட்டரகத் திரைப் படங்கள் போன்ற பொழுதுபோக்கு மாணவரின் நடத்தையையும் ஒழுக்கத்தையும் பாதிக்கின்றன.

சராசரி மாணவன் ஹாஸ்டலிலும் சரி வீட்டிலும் சரி தினசரிப் பத்திரிகை படிக்கிறான். அரசியல், சினிமா, ஸ்போர்ட்ஸ் இவை பற்றிச் சச்சரவு என்னும் அளவு விவாதம் செய்கிறான். ஸ்போர்ட்ஸ் பற்றிப் பேசுவதில் எல்லாரும் சீமான். ரிகார்ட், புள்ளிவிவரம் எல்லாம் தெரியும். விளையாடுகிறோம். ஆனால் காலேஜ் டீம் செலக்ஷனில் கூட நாங்கள் எதிர்பார்த்தபடி இராவிட்டால் ஒரு சோர்வு வந்து விடுகிறது.

பொதுவாக, பொறுமையில்லாத, திருப்தி இல்லாத ஒரு நிலை. வீட்டிலே இருக்கவும் பிடிக்கவில்லை. கூட்டத்திலே இருக்கவும் பொறுமையில்லை. ஸ்ட்ரைக் நடத்தினாலும் அதிருப்தி. அது முடிந்தாலும் ஒரு அதிருப்தி. எதுவும் எதிர்பார்த்தபடி இருப்பதில்லை.

மார்க்கு இருந்தாலும் சிபாரிசு இருந்தால் நல்லது என்று நினைக்க வேண்டிய சூழ்நிலை. கல்லூரி அட்மிஷன் கிடைத்ததும் டிகிரியே கிடைத்தது போன்ற திருப்தி. கூடவே ஒரு சோர்வு.



பாடப் புத்தகம் தவிர வேறு ஏதாவது அதிகப்படியாகக் கற்றுக் கொள்ளச் சிலர் ஆசைப்படுகிறார்கள். ஒரு பி. எஸ்ஸி. மாணவன் ஓய்வு நேரத்தில் பாங்கிங் படிக்கிறான். என்ன வேலை கிடைக்குமோ என்ற கவலை தான் காரணம். சிலர் சுருக்கெழுத்து, தட்டெழுத்து பழகுகிறார்கள்.

நாளடைவில் மாணவர் வைத்ததே சட்டம் என்றும் விடக் கூடாது. மாணவரைவிட, கல்லூரி நிர்வாகிகளுக்கு அதிக மதிப்பு அளிக்கப்பட்டால்தானே சீராக நிர்வாகம் நடத்த முடியும் ?

மாணவரிடையே எதிர்காலத்தைப் பற்றிய அக்கறை இருக்கிறது. பல துறைகளிலும் நாடு முன்னேற எவ்வளவோ செய்ய வேண்டும்; அதில் நமக்கும் பொறுப்பு உண்டு என்ற உணர்ச்சி இருக்கிறது. ஆனால் கூடவே ஒரு கவலை. ஓர் அவநம்பிக்கை.

பேட்டி : **அம்பி ஆசீர்வாதம்**

**அடுத்த பேட்டி : ஹோட்டல் நடத்திப் பார் !**

007 ராஜு

கதை: குமரன்

17









































உணவருந்திய பிறகு சுரேஷிடம் பாலு தன் கதையை விவரித்துக் கொண்டிருந்தான். அதே சமயம் சென்னையில் இரவு விமானத்தில் பம்பாய் கிளம்ப, பார்த்தன் ஜீப்பில் ஏறி மீனம்பாக்கம் சென்று கொண்டிருந்தார்.



தொடரும்



# தூக்கணாங் குருவிகள்



நெருக்கடியான ஒரு சந்து. அதில் இட நெருக்கடியான ஒரு வீடு. கீழேயும், மாடியிலேயும் மூன்று மூன்று அறைகள். சமையல் சாப்பாடு எல்லாம் கீழே. தங்குமிடம், அலுவலகம் எல்லாம் மேலே. மழை பெய்தால் மேல் அறையில் சாரல் அடிக்கும். மொட்டை மாடியில் வேயப்பட்டுள்ள கிடுகுக் கொட்டகை, பலத்த காற்றடித்தால் பறந்துவிடும். மொத்தத்தில் சென்னையில் ஒரு நடுத்தரமான குடும்பம் வசிக்கத்தக்க அளவுள்ள அந்த வீட்டில்தான் இந்தத் 'தூக்கணாங் குருவிகள்' இருக்கின்றன.

ஆம்! அங்கே தங்கியுள்ள ஸ்வீடன், டென்மார்க், இங்கிலாந்து ஆகிய நாடுகளைச் சேர்ந்த ஏழெட்டுப் பேர்களுக்கு அது தான் பெயர். ஆங்கிலத்தில் 'ஸ்வாலோஸ்' (Swallows) என்று அழைப்பார்கள்.

'ஸ்வாலோஸ்' என்பது மேல்நாடுகளில் ஒரு வகையான பறவை இனத்தைக் குறிக்கும். எல்லாப் பருவங்களிலும் இந்தப் பறவைகள் தென்படுவதில்லை. குறிப்பிட்ட சில காலங்களில் அவை கூட்டம் கூட்டமாக வரும். 'ஸ்வாலோஸ்' வானத்தில் பறக்கின்றன என்றால் மழை வரும் என்று அர்த்தம்; நிலம் குளிரும் என்பதற்கு அடையாளம்; பயிர் பச்சை வளர்ந்து மக்கள் வாழ்வில் மகிழ்ச்சியும், வளமும் உண்டாகும் என்னும் ஒரு சுபமான முன்னறிவிப்பு.

பொருத்தமான பெயர். ஏனெனில் அவர்கள் மேற்கொண்டுள்ள லட்சியம் இங்கே வந்து அவர்கள் தங்கியிருப்பதற்கான குறிக்கோள் அத்தகையது. தாழ்வுற்று, வறுமை மிஞ்சி அல்லற்படுகிற மக்களுக்கு மத்தியில் வாழ்ந்து, அவர்களில் பலருக்குத் தொழில் வசதி செய்து தந்து, அங்கேயுள்ள குழந்தைகளுக்கு இலவசமாகப் படிப்பும் பாலும், பழமும் கொடுத்து, மருத்துவ வசதிகளும் அளித்து, படிப்படியாகத் தன்னம்பிக்கையினை வளர்த்து, முன்னேற்றப் பாதையில் செலுத்துவதென்பது உயர்ந்த லட்சியமல்லவா?

'ஸ்வாலோஸ்' இயக்கத்தின் மூலதனம் ஸ்வீடன் நாடு. பிரான்ஸ் நாட்டைச் சேர்ந்த 'ஆபி பியரி' என்ற பாதிரியார் ஒரு முறை

தூக்கணாங் குருவிகள்





'பாடிக்' வண்ணமிடும் பெண்மணிகள்.

அந்த நாட்டுக்குச் சென்றாராம். 'மெலியாரைப் பாதுகாப்பது வலியார் கடமை; அது போல் ஏழைகளுக்கு உதவுவது செல்வந்தர் கடமை. உதவி என்றால் ஐந்தோ, பத்தோ நூறோ, இருநூறோ பணம் கொடுப்பதல்ல; ஏழைகளுக்கு மத்தியில் வாழ்ந்து, நைந்து போன மனங்களில் தன்னம்பிக்கையை உருவாக்கி, தங்கள் வாழ்க்கையைத் தாங்களாகவே உயர்த்திக் கொள்வதற்கு ஏற்ற வகையில் உதவ வேண்டும்' என்று கூறினாராம் அவர். அந்தக் கருத்து, ஸ்வீடன், டென்மார்க் நாடுகளில் வாழும் பலரது உள்ளங்களைத் தொடவே, அதன் நற்பயனாக உருவானது தான் இந்த இயக்கம்.

செல்வந்தர்கள் பணத்தைக் கொடுத்தனர். உழைப்பதற்கு ஆர்வம் உள்ளவர்கள் ஊழியர்களாகச் சேர்ந்தனர். அந்த இயக்கம் பலப்பட்டது. ஊழியர்களில் சிலர், தென்அமெரிக்க நாட்டில் உள்ள பெரு என்னும் இடத்துக்குச் சென்றனர். வேறுசிலர் சென்னையில் தண்டையார்ப்பேட்டையை அடுத்துள்ள 'செரியன் நகரு'க்கு வந்தனர். அவர்கள் இங்கே வருவதற்குக் காரணமாக இருந்தவர் விம்கோ தொழிற்சாலை நிர்வாகி திரு பீட்டர்சன். ஸ்வீடன் நாட்டைச் சேர்ந்தவர்.

மூன்றரை ஆண்டுகளுக்கு முன் 'செரியன் நகர் திட்டம்' தோன்றியது. செரியன் நகர், பாப்பந்தோட்டம், அசோக் நகர், தேசிய நகர் என்ற இந்த நான்கு பகுதிகளில் வாழும் மக்கள் மட்டும்தான் இதனால் பயனடைய முடியும்.

''மற்றப் பகுதி மக்களுக்கும் பயன் ஏற்படுமாறு இந்தத் திட்டத்தை விஸ்தரித்தால் என்ன?'' என்று இதன் 'லீடர்' ரங்நார் கவிண்ட்க்விஸ்ட் என்பவரிடம் கேட்டேன். இவர் ஸ்வீடனில் ஆசிரியராக இருந்தார். வயதானவர் போல் தோற்றம். ஆனால் ஓர் இளைஞனுக்குள்ள துடிப்பும், செயல் வேகமும் இவரிடத்தில் உள்ளன.

''அந்த அளவுக்கு எங்களிடம் பொருளாதார வசதியோ, ஆள் பலமோ இல்லை. இன்னும் சிறிது காலத்துக்குத்தான் இங்கே இருப்போம். நாங்கள் எதிர்பார்த்தபடி இந்தப் பகுதி மக்கள் ஓரளவுக்காவது வளர்ச்சி பெற்று, தன்னம்பிக்கையோடு விளங்குகின்றனர் என்று தெரிந்தால் நாங்கள் வேறோர் இடத்துக்குப் பறந்து விடுவோம் — பறவைகள் அல்லவா!'' என்றார் அவர் சிரித்துக்கொண்டே.

இந்த மூன்றரை ஆண்டுக் காலத்தில் இங்கே குறிப்பிடத்தக்க முன்னேற்றம் ஏற்பட்டுத்தான் இருக்கிறது. உதாரணமாக 'பாடிக்' தொழிற்கூடத்தைச் சொல்லலாம்.

துணிகளுக்கு வண்ணம் சேர்த்து, பூ வேலைப்பாடுகள் உள்ள அச்சு அடிப்பதற்கு 'பாடிக் பிரிண்டிங்' என்று பெயர். பதினேழு பெண்கள் இதில் ஈடுபட்டிருக்கிறார்கள். ஒவ்வொருவருக்கும் மாதம் ஒன்றுக்கு நாற்பதிலிருந்து ஐம்பது ரூபாய் வருமானம் வருகிறது.

''இந்த வேலைக்கு வருவதற்கு முன் என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?'' என்று ஒரு பெண்ணைக் கேட்டேன்.

''வேலையில்லாமல் வம்பளந்து கொண்டிருந்தோம். இப்போது நாங்களும் சம்பாதிக்கிறோம். இன்ஷூரன்ஸ், சிறு சேமிப்பு ஆகியவைகளில் பணம் போடுகிறோம். எங்கள் குடும்பச் செலவுக்கும் உதவியாக இருக்கிறது.''

'' 'ஸ்வாலோஸ்' இங்கிருந்து வேறு இடத்துக்குப் போய்விட்டால் நீங்கள் என்ன செய்வீர்கள்?''

''நாங்கள் கற்றுக் கொண்ட இந்தத் தொழில் இருக்கிறதே!'' என்று அந்தப் பெண் கூறிய பதிலில் தன்னம்பிக்கை மிளிர்ந்தது.

இந்தப் 'பாடிக்' துணிகளைக் கொண்டு ரெடிமேட் ஆடைகள் தயாரித்து ஸ்வீடன், டென்மார்க் மற்றும் பிற நாடுகளுக்கு அனுப்புகிறார்கள். இதன் மூலம் கிடைக்கும் பணம் மறுபடியும் இந்தத் தொழிலில் முதலீடு செய்யப்பட்டு வளர்ச்சிக்கு உதவுகிறது.

இது தவிர, அங்கஹீனமுள்ள ஆண்களின் தொழில் வாய்ப்புக்கென்று மரப் பொம்மைகள் தயாரிக்கும் ஒரு தொழில் கூடமும் இருக்கிறது. சுமார் இருநூற்றைம்பது குழந்தைகள் படிக்கிற பள்ளியும், வெளிப் பள்ளிகளில் படிக்கின்ற முந்நூற்றைம்பது மாணவர்களுக்கென்று இரவுப் பள்ளியும் நடத்தப்படுகின்றன. இங்கே உள்ள சின்னஞ் சிறு மருத்துவ மனைக்குத் தேவைப்படும் சில முக்கியமான மருந்து வகைகள் ஸ்வீடன், டென்மார்க் நாடுகளிலிருந்து வந்து விடுகின்றன. இந்தப் பகுதியில் மீனவர்கள் அதிகமாக இருப்பதால் மீன் பிடி தொழிலில் நவீன முறைப் பயிற்சிகள் அளிப்பதற்காக அவ்வப்போது நிபுணர்களும் வருகிறார்கள்.

இது ஒரு நகர்ப்புறத் திட்டம். கிராமப் புறத்துக்கும் ஒரு திட்டம் வேண்டுமல்லவா? திருப்போரூருக்கு அருகில் தையூர் கிராமத்தில் ஒரு மாதிரிப் பண்ணையை வைத்து நடத்துகிறார்கள். தரிசாக — வெட்ட வெளி

யாகக் கிடந்த பரந்ததொரு நிலப்பரப்பின் நடுவே, பாலைவனத்தில் ஒரு பூஞ்சோலை போல் இந்த விவசாயப் பண்ணை காட்சி அளிக்கிறது. இருக்கிற வசதிகளை வைத்துக் கொண்டே விவசாயத்தை எந்த அளவுக்கு உயர்த்த முடியும் என்று சுற்றுப்புறக் கிராமங்களில் உள்ள விவசாயிகள் இந்தப் பண்ணைக்கு வந்து தெரிந்துகொண்டு போகிறார்கள்.

''இவைகளுக்கெல்லாம் நிறையப் பணமாகுமே! இங்கே உங்களுக்கு ஏதாவது உதவி கிடைக்கிறதா?'' என்று 'லீடரை'க் கேட்டேன்.

''இல்லை. எல்லாப் பணமும் ஸ்வீடன், டென்மார்க்கிலிருந்து வந்து விடுகிறது. ஆண்டொன்றுக்கு இரண்டு லட்சம் ரூபாய் செலவாகிறது'' என்றார் அவர்.

''உங்கள் நாடுகளில் நீங்கள் வசதியாக இருந்திருப்பீர்கள். ஆனால் இங்கே நெருக்கடியான இடத்தில் — குறுகலான சந்துகளில் — அசுத்தமான பகுதிகளில்... உங்களுக்கு இதெல்லாம் சிரமமாக இருக்கும்!'' என்றேன்.

''ஓ... நோ! ஒரு லட்சியத்துக்காக நாங்கள் வந்திருக்கிறோம். சிரமங்கள் இருக்கும் என்று தெரிந்துதான் வந்தோம். வசதியான இடத்தில் எங்களுக்கு வேலை இல்லையே!'' என்றார் அவர்.

பறவைகள் பலவிதம். அதில் இது ஒரு விதம்!

— துரை

# இந்தியாவின் முதல் சர்க்கஸ்

''ஐரோப்பியர்கள் சர்க்கஸைத் தொடங்கியதோடு மட்டுமின்றி, அதை வெற்றிகரமாக நடத்தவும் செய்கிறார்கள். சர்க்கஸ் அவர்களுக்குக் கைவந்த கலை. இந்தியர்களால் இந்தக் காரியம் முடியவே முடியாது.''

ஜர்மானிய சர்க்கஸ் நிர்வாகி இப்படி மேடையேறிக் கூறியதும், புரொபஸர் விஷ்ணுபந்த் சத்ரே விருட்டென்று எழுந்தார். ''என்ன உளறுகிறீர்? ஓராண்டுக் காலத்துக்குள் நான் சர்க்கஸ் நடத்திக் காட்டுகிறேன்! இந்தியரால் முடியாத காரியம் ஒன்று உண்டா?'' என்று வீறுகொண்டு கூறினார்.

இந்த நிகழ்ச்சி நடந்தது 1875ம் ஆண்டில். ஹார்மிஸ்டன் என்ற பெயருள்ள புகழ்வாய்ந்த ஜர்மன் சர்க்கஸ் கம்பெனி ஒன்று பம்பாயில் அப்பொழுது நிகழ்ச்சிகளை நடத்திக் காட்டிக்கொண்டிருந்தது. உண்மையில் இந்திய மக்களுக்கு அதுவரை சர்க்கஸைப் பற்றி எதும் தெரியாது. 'தோபி தாலாப்' மைதானத்தில் அந்த சர்க்கஸ் நடந்துகொண்டிருந்தது.

சகல சாதனங்களும் நிறைந்த இந்தச் சர்க்கஸ் கம்பெனி பம்பாய்க்கு வந்ததும் காண வருவோரின் கூட்டத்தைக் கவருவதில் வெற்றி யடைந்தது. இந்தியாவின் பல பகுதிகளிலிருந்தும் மக்கள் இதைக் காண பம்பாய்க்குப் படை எடுத்தனர். அப்படித்தான் புரொபஸர் சத்ரே, புரொபஸர் சதாசிவராவ் கார்லேகர் முதலியவர்களும் இந்தச் சர்க்கஸைக் காண வந்தார்கள். புரொபஸர் சத்ரேயின் நண்பரான புந்தாள்வ் மன்னரும் வந்திருந்தார்.

புரொபஸர் சத்ரே சாங்கலி மன்னரின் போலீஸ் படையில் உயர்ந்த அதிகாரியாகப் பணியாற்றி வந்தார். சிவந்த அவரது மேனி அவருடைய ஆகிருதியைக் கம்பீரமாக எடுத்துக் காட்டியது. ஜரிகைத் தொப்பி, நீண்ட கோட்டு, தூய வேட்டி ஆகியவை அவருடைய கம்பீர ஆகிருதிக்கு மெருகு கூட்டின.

சர்க்கஸ் முடியும் கட்டத்தில் இருந்தது. கடைசியில், சர்க்கஸ் நிர்வாகி நன்றி தெரிவித்து இந்தியர்களுக்குச் சவால் விடவே, புரொபஸர் சத்ரே வெகுண்டு எழுந்தார். பார்வையாளர்களுக்கு மத்தியிலேயே உரக்கக் குரல் கொடுத்து அந்தச் சவாலை ஏற்றார்:

''இக்கூற்று இந்தியர்களைப் பெரிதும் அவமதிப்பதாகும். நான் இதைப் பொறுக்க முடியாது. ஓராண்டு காலத்துக்குள்ளேயே நான் இந்தியாவில் சர்க்கஸ் தொடங்கிக் காட்டுவேன். இந்த நிறைந்த சபையில் இதைநான் சபதமிட்டுக் கூறுகிறேன்.''

இப்படிக் கூறியதோடு நிறுத்திக் கொள்ளாமல், அவர் ஜர்மானிய நிர்வாகியை நோக்கி அதட்டும் குரலில், அந்த அவமானச் சொற்களை வாபஸ் பெறுமாறும் வற்புறுத்தினார்.

அவரது பேச்சின் உக்கிரத்தில் பார்வையாளர்களுக்கும் ரோஷம் பொத்துக் கொண்டு வந்தது. நாற்புறமிருந்தும் நிர்வாகிக்கு எதிராக எதிர்ப்புக் குரல்கள் எழும்பின. மக்களின் ஆக்ரோஷத்தைக் கண்ட நிர்வாகி திணறிப் போனார். தம் சொற்களை வாபஸ் பெற்று மன்னிப்புக் கோரினார்.

இந்த நிகழ்ச்சிக்குப் பின் புரொபஸர் சத்ரே தமது வேலையை ராஜிநாமாச் செய்துவிட்டுத் தமது சபதத்தை நிறைவேற்றுவதில் முழுமூச்சுடன் ஈடுபட்டார். புந்தாள்வ் மன்னர், குருந்தவாட்கர், சாங்கலி மன்னர் முதலியவர்களின் ஒத்துழைப்பின் பேரில் 1878ஆம் ஆண்டு விஜய தசமியன்று அவர் இந்திய சர்க்கஸை நிறுவினார். இந்த இந்திய சர்க்கஸ்தான் 'புரொபஸர் சத்ரே கிராண்ட் சர்க்கஸ்' என்னும் பெயரில் புகழ் பெற்றது. இந்த சர்க்கஸ் பாரத தேசம் மட்டுமின்றி வெளிநாடுகளிலும் காட்சிகள் பல நடத்திப் பணமும் புகழும் சம்பாதித்தது.

ஆனால் துரதிர்ஷ்டவசமாக விஷ்ணுபந்த் சத்ரே 1910ஆம் ஆண்டு திடீரென மரணமடைந்து விட்டார். பனுக, சர்க்கஸின் நிலை பலவீனமுற்றது. அவர் சகோதரர் காசிநாத் பந்த் சத்ரே இரண்டு ஆண்டுகள் வரை அந்த சர்க்கஸை நடத்திப் பார்த்தார். ஆனால் 1912ஆம் ஆண்டு இந்திய முதல் சர்க்கஸ் என்னும் புகழ்பெற்ற இந்தக் கம்பெனியைக் கலைக்கும்படி ஆகிவிட்டது.



இதற்கிடையில் 1883ஆம் ஆண்டு புரொபஸர் சதாசிவராவ் கார்லேகர், 'கிராண்ட் சர்க்கஸ்' என்ற பெயரில் சாங்கலியில் ஒரு சர்க்கஸை நிறுவியிருந்தார். இந்தச் சர்க்கஸ் மிகவும் புகழ் பெற்று அறுபது ஆண்டுகள் இடைவிடாமல் நடந்தது. ஆனால் 1943ஆம் ஆண்டு ரங்கூன் மாநகரில் ஜப்பான் குண்டு வீச்சுக்கு இரையாகி நசித்து விட்டது.

ஆதாரம்: சிவசங்கர் கார்லேகர் மராட்டியில் எழுதியது



வைட்டமின்கள்
செறிந்த சரிவிகிதச்
சீருணவு. வளரும்
குழந்தைக்குப்
பரிபூரணப்
பாலுணவு




**அமுல்** பாலுணவு

உங்கள் குழந்தைக்குத் தேவையான 7 வைட்டமின்கள் அடங்கியது.

# கிளிஞ்சல் கோபுரம்

ஜெகசிற்பியன்



### அத்தியாயம் பதினேழு

## மோகப் பகடை

சின்ன வீடுதான். ஆனால் தனி வீடு. புதிதாக உருவாகி வரும் ஒரு காலனியில் அது அமைந்திருந்தது. வீட்டைச் சுற்றி முள் கம்பி வேலி போடப் பட்டு நுழை வாயிலுக்கு மட்டும் மூங்கில் படல் கட்டப்பட்டிருந்தது.

அந்த மூங்கில் படலை ஓர் எருமை மாடு தன் கொம்பால் தூக்கித் தள்ளித் திறந்துகொண்டு உள்ளே நுழைந்து செடி கொடிகளை மேயப் போன அதே சமயம் முத்துசிவனின் ஸ்கூட்டரும் 'விர்'ரென்று வந்து புகுந்து வீட்டு வாசற்படியண்டை போய் நின்றது.

ஸ்கூட்டரின் பின்னால் உட்கார்ந்திருந்த ரட்சகன் சட்டென்று இறங்கிக் கொள்ள, முத்துசிவன் இடது காலைத் தரையில் ஊன்றிக் கொண்டு நிமிர்ந்து, 'வண்டியை எங்கே நிறுத்தலாம்' என்று கேட்பது போல் அவனை ஏறிட்டுப் பார்த்தான்.

''இப்படிக் கொடுங்க சார்!'' என்று ரட்சகன் ஸ்கூட்டரைப் பிடித்துக் கொள்ள முத்துசிவன் கீழே இறங்கினான்.

வாசற் படிக்கட்டுக்குப் பக்கவாட்டில் வரிசையாய் வளர்ந்திருந்த கல் வாழைச் செடிகளின் ஓரம் ஸ்கூட்டரைத் தள்ளிக் கொண்டு போய் 'ஸ்டாண்ட்' போட்டு நிறுத்திவிட்டு, தாழிடாமல், சாத்தியிருந்த கம்பிக் கதவைத் திறந்து வெகு சகஜமாக உள்ளே சென்றான் ரட்சகன். அவனைப் பின்தொடர்ந்து போகலாமா, வேண்டாமா என்ற தயக்கத்துடன் வராந்தாவில் ஏறி நின்றான் முத்துசிவன்.

உள்ளே ஓர் அறையில் 'டைப்' அடிக்கும் ஒலி கேட்டது. அந்த ஒலியையும் மேவிக் கொண்டு, மற்றோர் அறையிலிருந்து நோய் உபாதையுடன் மெல்ல முனகுவது போன்ற ஓசை எழுந்தது. இவ்விரண்டையும் பொருட்படுத்தாமல் — பொருத்தமில்லாமலும் கூட — இன்னோர் அறையில் யாரோ ரேடியோவைப் பல நிலையங்களுக்குத் திருப்பிக் கொண்டிருந்ததால் வெளிப்பட்ட 'கர்புர், கடமுடா' சத்தங்களுடன் ஏதேதோ மொழிப் பாட்டுக்களும் பேச்சுக்களும் திடும் திடுமென்று எழுவதும் அடங்குவதுமாக இருந்தன.

சற்றைக்கெல்லாம் ரேடியோவின் கழுத்தறுப்பு ஒலிகள் ஓய்ந்தன. உபாதை முனகலும் அடங்கியது. ரட்சகன் ஏதோ 'விட்' அடித்துவிட்டுக் கடகடவெனச் சிரிக்கும் சத்தம் கேட்டது. ஆனால், 'டைப்' அடிக்கும் ஓசை மட்டும் தொடர்ந்து கேட்டுக் கொண்டிருந்தது.

''நமஸ்தே! வாருங்கள்!''

உள்ளார்ந்த வியப்பும் குறுகுறுப்புமாக வராந்தாவில் நின்று கொண்டிருந்த முத்துசிவன், 'சட்'டென்று நிமிர்ந்தான். வாசல் திரையை ஒரு புறமாக ஒதுக்கித் தள்ளிவிட்டு உள்ளிருந்தவாறே இனிய புன்முறுவலுடன் வணங்கி வரவேற்றாள் வந்தனா.

முத்துசிவனுக்கு ஒரே தடுமாற்றம்! அவளை அடையாளம் தெரிந்துகொள்வதில்தான் அவன் அத்தகைய தடுமாற்றத்துக்கு உள்ளானான்.

அன்றொரு நாள் இந்திர மகாலின் க்ரீன் ரூமிலும், பிறகு நாடகமேடையிலும் பார்த்த அந்த வந்தனுவா இவள்? அன்று பார்த்ததற்கும் இப்போது பார்ப்பதற்கும் எவ்வளவு வித்தியாசம்!

நல்ல ரோஜா நிறக் கன்னங்கள், கொவ்வைச் செவ்வாய், விற் புருவங்கள், விநோதமாக வளர்த்துப் போட்ட கூந்தல் கொண்டையில் முத்துச் சரங்கள், கையிலும், கழுத்திலும் பளீரிட்ட பலவித ஆபரணங்கள், ப்ரில்ஸ் நிறைய வைத்துத் தைத்த சில்க் பாவாடை, நைலான் தாவணி, ஜிகினு இழைத்த சோளி — என்று இப்படி ஒரு ராஜகுமாரியைப் போல் விளங்கிய அவளை அப்போது பதினேழு அல்லது பதினெட்டு வயதே மதிக்கத் தோன்றியது. ஆனல் இப்போதோ, மிக மிக எளிய ஆடை அணிமணிகளுடன் ஒரு குடும்பப் பாங்கான பெண்ணுக விளங்கிறுள். வயதும் இருபத்தாறுக்குமேல் இருக்கும் என்று நிச்சயமாய்த் தெரிந்தது.

இந்த எளிய கோலம், வதனப் பிராந்தியத்தில் தோன்றும் வயது முதிர்ச்சி— இவையெல்லாம் இருக்கட்டும்; , இவற்றைத் துச்சப் படுத்தும்வகையில் அமைந்த அவளின் உடல் வனப்போ.. சந்தன நிறச் சுரைக்காய்ப் பலூனில் அளவாகக் காற்றடித்துக் கட்டி நிறுத்தி வைத்தாற் போன்ற — ஒரு மினுமினுப்புடன் கூடிய — புடைப்புத் தன்மை அந்த உடலெங்கும் விரவிக் காணப்பட்டது! அதன்மீது சும்மா ஒரு சிறு குன்றிமணியைத் தூக்கிப் போட்டால், போட்ட தூர அளவைக் காட்டிலும் இரண்டு மடங்கு தூரத்துக்கு அப்பால் அது விண்ணென்று தெறித்துப் போய் வீழ்ந்து விடும்!...அப்படி ஒரு வனப்புடன் தளதளவென்று விளங்கிய அந்த உடம்பை, 'ஆடுதுறை இருபத்தேழு ரகத்துடன்' ஒப்பிடலாம் போல் தோன்றியது.

''நிற்கிறீர்களே! உள்ளே வந்து உட்காருங்கள்!'' என்று மீண்டும் தன் கோகிலக் குரல் எடுத்து அகவிஞள் வந்தனு.

தன்னிலிருந்து 'தான்' நழுவிப்போன நிலையில் நின்று கொண்டிருந்த முத்துசிவன் சட்டென்று தன்னைச் சமாளித்துக்கொண்டு, கூச்சக் குழைவுடன், ''இருக்கட்டும்; பரவாயில்லை'' என்றவாறு இடதுபுறமிருந்த ஓர் அறைக்குள் சென்று, 'சோபா—கம்—பெட்' வகையைச் சேர்ந்த ஒரு சோபாவில் உட்கார்ந்தான்.

''பார்த்தாயா, வந்தனு? எங்க சார் உன்னைப் பார்க்கத்தான் வந்திருக்கிறுர்!'' என்று பெருமையுடன் சொல்லிக்கொண்டே எதிர் அறையிலிருந்து விரைந்து வந்த ரட்சகன் அமர்த்தலாக ஒரு நாற்காலியில் சாய்ந்தான். ''ஆமாம், தங்கச்சி! 'பகல் கொள்ளை' நாடகத்திலே உன்னுடைய அபாரமான நடிப்பைப் பார்த்த எங்க சார் அப்படியே அசந்து விட்டார். என்னிடம் சொல்லிச் சொல்லிப் புகழ்ந்தார். அதிலும் திருப்திப்படாமல் இப்ப உன்னை நேரிலேயே பார்த்துப் பாராட்ட வந்து விட்டார்.''



பொறியில் அகப்பட்டுக் கொண்ட எலி போல் தவித்த முத்துசிவன், 'என்ன இவன் நாசூக்குத் தெரியாமல் குட்டை உடைத்து விட்டானே!' என்று எண்ணி உள்ளூறச் சங்கடப்பட்டுக் கொண்டான்.

வாசல் நிலையைப் பிடித்தவாறு ஒய்யாரமாக நின்றிருந்த வந்தனா கழுத்தைச் சாய்த்து முத்துசிவனை ஒரு தினுசாகப் பார்த்துக் களுக்கெனச் சிரித்து விட்டு, ''தெரியுமே! அவர் என்னைப் பார்க்க வருவார்னு அப்பவே எனக்குத் தெரியும்!'' என்றாள் பெருமிதம் இழைந்த குரலில்.

''எப்பவே தெரியும்?'' என்று கண்களை இமைச் சதைக்குள் இடுக்கிக் கொண்டு கேட்டான் ரட்சகன்.

''இவரை நீங்க க்ரீன் ரூமுக்கு அழைச்சு வந்து அறிமுகப்படுத்தினீங்களே, அப்பா!''

முத்துசிவன் இதைக் கேட்டுத் திடுக்குற்றுப் போனான். ஜால வித்தைக்காரன் கறுப்புத் திரைக்குப் பின்னால் வெகு சாமர்த்தியமாக மறைத்து வைத்திருந்த சூட்சுமப் பொருள் ஒன்றைத் திடுமென்று தூரட்டுக்கோலால் கொத்தாக இழுத்து வெளியே போட்டுவிட்டால் எப்படி வெட்கித் திகைத்து



# 'ஆஸ்ப்ரோ' மட்டுமே மைக்ரோஃபைன்ட் செய்யப்படுகிறது

## அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' செயல்புரியும் விதம்







ஒரு மாத்திரையில் உள்ள அணுக்கூறு எவ்வளவுக்கெவ்வளவு பெரியதாக உள்ளதோ அது உங்கள் உடலில் கலப்பதற்கு அவ்வளவுக் கவ்வளவு நேரமாகிறது. நீங்கள் வலியிலிருந்து நிவாரணம் பெறவும் அவ்வளவுக்கவ்வளவு காக்க வேண்டியிருக்கிறது.

மைக்ரோஃபைன்ட் ஆக இருப்பதனால் புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' வின் ஒவ்வொரு மாத்திரையிலும் சுமார் 15 கோடி நுண்ணிய அணுக்கூறுகள் அடங்கியுள்ளன —எனவே, அது மேலும் துரிதமாக இரண்டறக் கலந்து விரைவில் நிவாரணம் அளிக்கிறது.

கீழ்க் கண்டவைகளுக்கு புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்: நோவு • தலைவலி • உடல்வலி • ஃப்ளு • ஜுரவேகத்துடன் கூடிய ஜலதோஷம் • மூட்டுவலி • தொண்டை அழற்சி • பல்வலி

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' இப்பொழுது கிடைக்கும் அதி நவீனமான வலி நிவாரணியாகும்.

**சாப்பிடும் அளவு:**

**வயது வந்தவர்கள்:** இரண்டு மாத்திரைகள். தேவையானால் மீண்டும் சாப்பிடவும்.

**குழந்தைகள்:** ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொல்படி






புதிய

**மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'**

அதி வேகமாக வலியை வெளியே இழுத்து விடுகிறது.

நிக்கோலஸ் தயாரிப்பு

விழிப்பாரோ, அப்படி விழித்தான் அவன்.

ரட்சகனுக்கும் அவள் அவ்வாறு சொன்னது கொஞ்சம் வியப்பாகத் தான் இருந்தது. ஆனால், அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல், ''பெரிய ஆளாச்சே நீ! உனக்கா டயலாக் பேசச் சொல்லிக் கொடுக்கணும்?'' என்றான் அமர்த்தலாகச் சிரித்தபடியே.

''என்ன தம்பி, நாடகக் கதை என்னன்னு சொல்லாமலே டயலாக்கைப் பற்றிப் பேச ஆரம்பிச்சுட்டீங்க?'' என்று கேட்டுக் கொண்டே அந்த அறைக்குள் பிரவேசித்தாள் வந்தனாவின் தாயார் கோகிலாம்பாள். அவள் உடல் நலமில்லாமல் படுத்திருந்து, எழுந்து வந்த மாதிரி தோற்றம் அளித்தாள். ஆனாலும் பட்டுப் புடவை அணிந்து, முகத்தில் பவுடர் பூச்சும் விளங்க களையாக கொலுவைப்பாகவே காட்சியளித்தாள்.

''இது வேறே டயலாக்கம்மா! நீங்க இப்படி வந்து உட்காருங்க!'' என்று சொல்லிச் சிரித்த ரட்சகன், தன்னையே அவசரப்படுத்திக் கொள்கிறவன் போல், ''ஹோ!...தியேட்டர்க்காரனைப் பார்த்து 'டேட்' வாங்கணும்; சின்காரனுக்கு அட்வான்ஸ் கொடுக்கணும்; பிரூனிக் பார்ட்டிக்குக் கால்ஷீட் போடணும்; டிக்கட் அச்சடிக்கப் பிரஸுக்குப் போகணும்—இவ்வளவு வேலைகளையும் இன்னிக்கே செய்தாகணுமே!...'' என்று தனக்குள் படபடப்புடன் சொல்லிக் கொண்டான்.

கோகிலாம்பாள் ஒரு கூடை நாற்காலியில் வந்து உட்கார்ந்து கொண்டு முத்துசிவனைப் புதிதாகப் பார்க்கிறவள் மாதிரி பார்த்து, ''ஐயா யாரு? எங்கேயோ எப்பவோ பார்த்த ஞாபகமாக இருக்குதே!'' என்றாள் இழுத்தாற்போல.

''உங்களுக்கு யாரையும் எங்கேயாவது பார்த்த மாதிரிதான் இருக்கும்!'' என்று குத்தலாகக் கூறி நகைத்த ரட்சகன், ''என்னம்மா, இதுக்குள்ளாறவா மறந்துட்டீங்க?... இவர்... இவரை....'' என்று சொல்லி முடிப்பதற்குள் கோகிலாம்பாள் குறுக்கிட்டு, ''ஆமாம்; இப்பத் தெரியுது! ஐயாவை அன்னைக்கு அந்த மேக்-கப் ரூமிலே அழைச்சு வந்து காட்டினீங்க இல்லையா?'' என்று சொல்லிக் கொண்டே வாசல் நிலையோரம் நின்றிருந்த தன் மகளை மெல்லத் திரும்பிப் பார்த்தாள்.

அவளுடைய அந்தப் பார்வையிலிருந்து எதையோ புரிந்து கொண்ட



''என்னுடைய ஜோக்கா இல்லை! என் பெண் சகல கலா வல்லி.''

''ஓ! பாட்டு, டான்ஸ், நெசவு, சமையல் என்று சகல கலையிலும் வல்லவள் போலிருக்கு.''



''உம்...அதில்லே! ஊர் வம்பு, எவரிடமும் வீரம், கடைக்காரியிடம் கோள், அண்டை வீட்டிலே சண்டை, கைமாற்று, இப்படிப் பட்ட சகல கலைகளிலும் கெட்டிக்காரி!''

வள் போல் வந்தனா அங்கிருந்து சரேலென உள்ளே போய்விட்டாள்.

இவ்வளவையும் பார்த்துக் கொண்டு ஒருவிதத் திகைப்புடன் உட்கார்ந்திருந்தான் முத்துசிவன்.

''சரி, தம்பி! உங்க நாடகக் கதையைச் சொல்லுங்க. கதையிலே என் பெண்ணுக்கு நல்ல 'ரோல்' இருந்தால் தான் நடிப்பாள். இப்ப எங்களுக்கு 'ரோல்'தான் முக்கியம். சான்ஸ் முக்கியமில்லே...'' என்று பேச்சைத் தொடங்கினாள் கோகிலாம்பாள்.

''இது நீங்க வழக்கமாப் பேசற டயலாக்குதான்'' என்று மெல்லச் சிரித்துக் கொண்ட ரட்சகன், தன் கையில் இருந்த பைலை அலட்சியமாகப் புரட்டிப் பார்த்துக் கொண்டே, ''இங்கே பாருங்கம்மா! நாடகத்துக்கு இன்னும் கதையைச் 'செட்' பண்ணலே; ஆனால் டயலாக்கை எழுதி முடிச்சுட்டேன்'' என்றான் பெருமையுடன்.

''கதை இல்லாமலே வசனம் எழுதிட்டீங்களா? அப்ப நாடகம் புது மாதிரிதான் இருக்கும்.''

''ரொம்ப ரொம்பப் புது மாதிரி!''

''கதையை எப்போ 'செட்' பண்ணுவீங்களாம்?''

''அது ரொம்ப ஈஸிமா! வசனங்களை சீன் வாரியாப் பிரிச்சு, சீன்களுக்கு ஒண்ணு, ரெண்டு, மூணுன்னு நம்பர் போட்டுட்டா கதையாகிப்பிடும்.''

''சரி; நாடகத் தலைப்பு என்ன?''

''நாளைக்கு ஹிக்கின்பாதம்ஸுக்குப் போகணும்னு இருக்கிறேன். அங்கே போய் ஒரு நல்ல தலைப்பை 'செலக்ட்' பண்ணிக்கிட்டு வந்துவிடுவேன். பாருங்களேன், இந்த நாடகம் மெட்ராஸையே ஒரு கலக்குக் கலக்கிடப் போகுது.''

குப்பென்று சுகந்த மணம் வீச, அழகு நடை பயின்று உள்ளே வந்த வந்தனா தன் தாயாரின் அருகிலிருந்த ஒரு மோடாவில் போய் ஒயிலாக அமர்ந்தாள். சற்று முன்னால் பார்த்த வந்தனாவா அவள்? இப்போது முற்றிலும் வேறு ஆடை அணி மணிகள் புனைந்து கொண்டு எழில் வழியக் காட்சியளித்தாள்.

முத்துசிவன் அவளைப் பார்த்துப் பிரமித்துப் போனான். அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை. எல்லாம் ஏதோ நாடகம் பார்ப்பது போலிருந்தது அவனுக்கு.

தன் மகளை ஓரக் கண்ணால் பார்த்துக்கொண்ட கோகிலாம்பாள், ''எதுக்கும் ஒரு டயலாக்கையாவது படிச்சுக் காட்டுங்க தம்பி! என் பெண்ணுக்கு நடிக்க 'ஸ்கோப்' இருந்தால்தான் அவள் நடிக்க ஒப்புத்துக்குவாள்'' என்றாள், சற்றுக் கண்டிப்பான குரலில்.

''வசனம்தானே? இதோ, உணர்ச்சி நிறைஞ்ச ஒரு சீனிலே வருகிற வசனத்தைப் படிக்கிறேன், கேளுங்க!'' என்று உற்சாகத்துடன் எழுந்த ரட்சகன், அறையின் நடுவில் வந்து நின்று தொண்டையைக் கனைத்துவிட்டுக் கொண்டான். பிறகு வந்தனாவைப் பார்த்து அழுவது போல் முகத்தை வைத்துக் கொண்டு, ''அன்பரே! என்னை நீங்கள் தவறாகப் புரிந்து கொள்வீர்களோ என்பதற்காக நான் என்றுமே கவலைப்பட்டதில்லை. உங்களை என்னால் சரியாகப் புரிந்து கொள்ள முடியவில்லையே என்பதற்காகத்தான் வருத்தப்படுகிறேன்!'' என்றான் கம்மிக் கரகரத்த குரலில். உடனே, அவன் நிமிர்ந்து, ''தங்கச்சி! எங்கே, இந்த வசனத்தைப் பேசிக் காட்டு, பார்க்கலாம்?'' என்று உத்தரவிடுவது போல் சொல்லி விட்டு, பின்னால் நகர்ந்தான்.

வந்தனா ஒரு நிமிடம் மௌனமாயிருந்தாள். அவளின் மை தீட்டிய புருவங்கள் நெளிந்து கண்கள் கலங்கிப் பனித்தன. முகத்தில் சோகம் கவிந்தது. உதடுகள் துடித்தன. விம்மிப் பொருமிக் கொண்டே எழுந்த அவள் நேரே முத்துசிவனின் எதிரில் போய் நின்று, அவனது மோவாயைப் பற்றி நிமிர்த்தி, ''அன்பரே! என்னை நீங்கள் தவறாகப் புரிந்து கொள்வீர்களோ என்பதற்காக நான் என்றுமே கவலைப்பட்டதில்லை. உங்களை என்னால் சரியாகப் புரிந்து கொள்ள முடியவில்லையே என்பதற்காகத்தான் வருத்தப்படுகிறேன்!'' என்றாள் புலம்பி அழும் குரலில். மறுகணம் அவள் வெடுக்கென்று நிமிர்ந்து கலீரெனச் சிரித்துக் கொண்டே ஓடி வந்து தன் இருக்கையில் உட்கார்ந்து வெட்கத்துடன் தலை குனிந்து கொண்டாள்.

''பிரமாதம், பிரமாதம்!... எப்படியம்மா நம்ப டயலாக்கு?'' என்று பெருமையுடன் புருவங்களை உயர்த்திக் கேட்டான் ரட்சகன்.

''பரவாயில்லே; நல்லாத்தான் இருக்குது! வந்தனா அந்த வசனத்துக்கு உயிர் கொடுத்து விட்டாள்!'' என்று திருப்தியுடன் தலையாட்டினாள் கோகிலாம்பாள்.

முத்துசிவனுக்கு ஒரே வெடவெடப்பும் கிடுகிடுப்புமாகி விட்டன. ராஜாங்க விருந்துக்குப் போன வயிற்று வலிக்காரனைப் போல் தவித்துத் திணறினான் அவன்.

''எத்தனை ரிஹர்ஸலுக்கு வரணும் தம்பி?'' என்று விவகார விஷயத்துக்குப் பேச்சைத் தொடங்கினாள் கோகிலாம்பாள்.

''வழக்கம்போல் நாலு ரிஹர்சலுக்கு வந்தால் போதும்.''

''ஏன், ரெண்டு போதாதா?''

''மூணுக்காவது வந்தால் தேவலை.''

''செலவு அதிகமாகுமே?''

''அந்தக் கவலை உங்களுக்கு வேண்டாம்மா! அதுக்கெல்லாம் துணிஞ்சிட்டேன்.''

ஒரு கணம் ஏதோ யோசித்த கோகிலாம்பாள், தன் மகளைப் பார்த்து, ''நேத்திக்குக் காரைப் போட்டுக்கிட்டு வந்த அந்தப் புரொடியூஸருக்கு எத்தனை கால்ஷீட் கொடுத்தே?'' என்று கேட்டாள்.

''அது அப்பாவுக்குத்தான் தெரியும். அவரைக் கேளு!'' என்றாள் வந்தனா இனிய குரலில்.

இந்நேரம் அடுத்த அறையிலிருந்து கேட்டுக் கொண்டிருந்த 'டைப்' அடிக்கும் ஒலி சட்டென்று நின்று சில விநாடிகளுக்குப் பின் மீண்டும் ஒலிக்க ஆரம்பித்தது.

''சரி; நீங்க எந்தெந்தத் தேதியிலே ஒத்திகை வைச்சுக்கிறீங்கன்னு சொல்லிவிடுங்க. அதுக்குத் தோதா நான் அட்ஜஸ்ட் பண்ணிக்கிட்டு வரப் பார்க்கிறேன்'' என்றாள் கோகிலாம்பாள்.

''நீங்க வந்தால் பிரயோசனப்படாதம்மா. வந்தனா வரணும்'' என்று சொல்லிக் கடகடவென்று சிரித்தான் ரட்சகன்.

# உங்களுக்கென சொந்தமாக ஒரு வீடு

இப்பொழுது இந்தக் கனவை நனவாக்க உதவுகிறது எல்.ஐ.சி. வீடு கட்டிக்கொள்வதற்கென, அல்லது குடியிருப்பதற்கு ஒரு புது வீடு வாங்க நியாயமான வட்டிக்கு கணிசமான கடனைத் தருகிறது. நிபந்தனைகள் சுலபமானவை. உங்களுக்கு ஒரு மனை இருக்க வேண்டும். வீடு கட்டும் செலவுக்கென்றும், இதர சில்லறைச் செலவுகளுக்கும் சுமாரான ஆரம்ப



முதலீடும், அங்கீகாரம் பெற்ற திட்டங்களின் கீழ், போதுமான தொகைக்கு ஆயுள் இன்சூரன்சுப் பாலிசியும் இருக்க வேண்டும். கடனை அடைப்பதற்கான தவணைக் காலம் முடியும்வரை நீங்கள் உயிருடனில்லாவிட்டால்கூட, உங்கள் அன்புக் குடும்பத்தினர், சொந்த வீட்டில் பத்திரமாக இருப்பார்கள். நினைக்கும்போதே மனதிற்கு நிம்மதியாக இருக்கிறது, இல்லையா?



இந்தத் திட்டம் குறிப்பிட்ட சில நகரப் பகுதிகளில்தான் அமலில் இருக்கிறது. மேலும் விவரங்களுக்கு, தயவுசெய்து அருகிலுள்ள எல்.ஐ.சி. டிவிஷனல் ஆபீசை அணுகுங்கள்.



**ஆயுள் இன்சூரன்சு**

**போல ஆதரவு தருவது எதுவுமே இல்லை**



# ஃபாஸ்ஃபோமின்

சக்தியை அதிகரிக்கிறது.



பசியைத் தூண்டுகிறது.



வலிவைப்

பெருக்குகிறது.

நோய்களை எதிர்க்கும் சக்தியை

கூட்டுகிறது.

சுருங்கச் சொன்னால்—
குடும்பத்தில் அனைவரும் திட
ஆரோக்கியத்துடன் திகழ
உதவுகிறது ஃபாஸ்ஃபோமின்




ஃபாஸ்ஃபோமின்... 'பி' காம்ப்ளெக்ஸ் வைட்டமின்களும்,
பலவகை கிளிஸரோஃபாஸ்பேட்டுகளும் அடங்கிய,
பழரஸ மணம் கமழும் பச்சைநிற டானிக்.

SQUIBB® TTT® ® இ. ஆர். ஸ்க்விப் அண்டு ஸன்ஸ் இன்கார்பொரேடெட்டின் ரிஜிஸ்டர்ட் டிரேட் மார்க்குகள், சாரக்சந்த் பிரேம்சந்த் ப்ரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

SARABHAI CHEMICALS

Shilpi SC 50A /67 Tam

கோகிலாம்பாளும் ஒரு 'குமரிச் சிரிப்புச்' சிரித்துவிட்டு, ''உங்க நாடகத்திலே ஐயாவுக்கு எதனுச்சும் 'ரோல்' கொடுக்கப் போறீங்களா?'' என்று முத்துசிவனைப் பார்த்துக் கேட்டவள், ''கொடுக்கலாமே!... ஹீரோ ரோலே கொடுக்கலாம். இல்லேன்னு ஹீரோயினுக்கு அப்பா வேஷமும் கொடுக்கலாம்'' என்று முடித்தாள்.

இதைக் கேட்ட ரட்சகன் ஏதோ தீயை மிதித்து விட்டவன் போல் ஒரு துள்ளுத் துள்ளிப் பரபரப்புடன் நிமிர்ந்து கோகிலாம்பாளை நோக்கி இரகசியமாக உதட்டைக் கடித்துக் கண்களை உருட்டினான்.

அவனுடைய இந்தச் சமிக்ஞையைப் புரிந்து கொண்டவள் போல் அசட்டுப் புன்னகை பூத்த கோகிலாம்பாள், ''ஐயா கோபிச்சுக்கப்படாது. சும்மா ஒரு யோசனைதான் சொன்னேன். தப்பாயிருந்தால் மன்னிக்கணும்'' என்றாள்.

விளக்கெண்ணெய் குடித்தவன்போல் உட்கார்ந்திருந்த முத்துசிவன், ''அதனுலென்ன? பரவாயில்லே'' என்று குழறியவாறு வந்தனுவைக் கடைக்கண்ணால் நோக்கினான். அவளும் அவனையே மந்தகாசப் புன்னகையுடன் கிறப் பார்வையில் பார்த்தவாறு அமர்ந்திருந்தாள்.

கோகிலாம்பாளுக்கு என்ன ஆயிற்றோ, தெரியவில்லே. இரண்டு மூன்று தடவை பெரிதாக ஏப்பம் விட்டு முகத்தை வலித்துப் பெருமூச்சு வாங்கினாள். பிறகு மெல்லிய குரலில், ''சரி, தம்பி! என்னாலே உட்கார்ந்திருக்க முடியலே. அப்படி வாங்க, மற்ற விஷயங்களைப் பேசுவோம்!'' என்றவாறு எழுந்து அடுத்த அறைக்குப் போய் விட்டாள். ரட்சகனும் அவளைப் பின்தொடர்ந்து சென்றான்.

பக்கத்து அறையில் கேட்டுக் கொண்டிருந்த 'டைப்' அடிக்கும் ஒலி நின்றது.

முத்துசிவன் தன்னை மீறிய அநுதாபத்துடன் வந்தனுவை நோக்கி, ''உன் அம்மாவுக்கு உடம்பு என்ன?'' என்று வினவினான்.

''ஒண்ணுமில்லே. இலேசா 'பிளட் பிரஷர்' இப்ப டாக்டர் ட்ரீட்மெண்டிலே இருக்கிறாங்க.''

''த்சொ, த்சொ!'' என்று தன் பரிவைத் தெரிவித்தான் முத்துசிவன்.

வந்தனு அவனைப் பார்த்து அழகாகச் சிரித்தாள். சிரித்துக் கொண்டே எழுந்து வந்து அவன் அமர்ந்திருந்த நீண்ட சோபாவின் மறு முனையில் ரொம்பப் பதவிசாக உட்கார்ந்து சற்று நேரம் அவனையே குறுகுறுவெனப் பார்த்துக்கொண்டிருந்தாள். பிறகு ''ஆமாம்! என்னை நீங்கள் பாராட்ட வந்திருப்பதாக ரட்சகன் சொன்னார்; நீங்களானால் வந்ததிலிருந்து ஒண்ணுமே பேசாமல் உம்மென்று இருக்கிறீர்களே?'' என்று குறும்பு கொப்புளிக்கும் குரலில் கேட்டாள்.

முத்துசிவனின் மனம் படபடவென்று அடித்துக் கொண்டது. என்ன செய்வது, என்ன பேசுவது என்று தெரியாமல் அப்படியும் இப்படியுமாக அசைந்து நிமிர்ந்த அவன், ''அதெல்லாம் இல்லே. நான் சும்மா... உன்னைப் பார்க்கத்தான் வந்தேன்'' என்று குழம்பினான்.

'களுக்'கென்று சிரித்த வந்தனு, சோபாவிலிருந்து வழுக்கிக் கொண்டு போய் அவன் முகத்துக்கு நேரே தன் முகத்தைச் சாய்த்து வைத்துக் கொண்டு, ''சும்மா பார்க்க வந்தீர்களா?... சரி, சும்மாவே என்னை நன்றாகப் பாருங்கள்!'' என்றாள்.

அவளின் இந்தக் கேலிப் பேச்சைக் கேட்டு முத்துசிவனுக்குச் சிரிப்பு வந்து விட்டது. சற்றே கூச்சம் தெளிந்தவனாய் மெல்ல வாய் விட்டுச் சிரித்தான் அவன்.

''ஒரு விஷயம் உங்களுக்குத் தெரியுமா? நீங்கள் இன்று என்னைப் பார்க்க வந்திரா விட்டால் நானே உங்களைச் சந்திக்க வந்திருப்பேன் உங்கள் வீடு தேடி!''

வியப்புடன் அவளைக் கூர்ந்து நோக்கிய முத்துசிவன், ''என்னது? என்னைப் பார்க்க நீ வந்திருப்பாயா?'' என்று அவசரமாகக் கேட்டான்.

''ஊம்ம்!...''

''ஏன், என்ன விஷயம்?''

''விஷயம் ஒன்றுமில்லே. அன்றைய தினம் உங்களைப் பார்த்தபோதே மறுபடியும் பார்க்க வேண்டும் போல் எனக்கு ஆகி விட்டது.''

கொஞ்சம் தைரியத்தை வரவழைத்துக்கொண்ட முத்துசிவன், ''காரணம் இல்லாமலா?'' என்று கேட்டுவிட்டுச் சிரித்தான்.

வந்தனுவும் கலீரெனச் சிரித்தாள். அப்படிச் சிரித்த போது அவளுடைய தோள் குலுங்கி அவனுடைய கை முட்டியில் இடித்தது.

முத்துசிவன் திகைத்தான். காரணம் புடைப்புத் தன்மை வாய்ந்த அவளின் உடல் மீது எது பட்டாலும் விண்ணென்று துள்ளித் தெறித்துப் போய் விடும் என்று அவன் முன்னர் அநுமானித்ததற்கு மாறாக, பஞ்சுப் பொதியில் ஈயக் குண்டு விழுந்ததும் உள் வாங்கிக் கொள்ளுமே அத்தகையதோர் மென்மையான ஈர்ப்புத் தன்மையுடன்

அவ்வுடம்பு இருந்ததை உணர்ந்தே அவ்வாறு திகைப்படைந்தான்.

''ஆமாம்; நீங்கள் இப்போது என்னைச் சும்மா பார்க்கத்தானே வந்திருக்கிறீர்கள்? அப்படித்தான் நானும் உங்களைச் சும்மா பார்க்க வந்திருப்பேன். ஏன் வரக் கூடாதா?''

''வரலாமே! தாராளமாக வரலாம்!''

''வந்தால் உங்கள் மனைவியும் பிள்ளைகளும் என்னை வரவேற்பார்களா, விரட்டுவார்களா?''

தனக்குத் திருமணமாகி விட்டதா, இல்லையா என்னும் விவரத்தைத் தெரிந்து கொள்ளவே அவள் இத்தனை நாசூக்காகவும் சாமர்த்தியமாகவும் இந்தக் கேள்வித் தூண்டிலைப் போட்டு இழுக்கிறாள் என்பதை உடனே புரிந்து கொண்ட முத்துசிவன், ''வரவேற்பதற்கோ விரட்டுவதற்கோ அப்படி யாரும் என் வீட்டில் இல்லை!'' என்றான் விஷமச் சிரிப்புடன்.

''இப்போது இல்லையா? அல்லது...''

''எப்போதுமே இல்லை.''

''ஓ!...... நானும் அப்படித்தான் நினைத்தேன்'' என்று சொன்ன வந்தனாவின் குரலில் வருத்தமும் அநுதாபமும் கலவைவிட்டுத் தொனித்தன.

''அப்பாடா! விஷயம் ஒரு தினுசா முடிஞ்சது!'' என்று சொல்லிக் கொண்டே அடுத்த அறையிலிருந்து வந்த ரட்சகன் சட்டென்று நின்று நிமிர்ந்தான். வந்தனாவும் முத்துசிவனும் ஒரே சோபாவில் உட்கார்ந்து ரொம்ப நாட்கள் பழக்கப்பட்டவர்கள் போல் வெகு சகஜமாகப் பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்தே அவன் அவ்வாறு வியப்புற்று நிமிர்ந்தான். உடனே தன்னைச் சமாளித்துக்கொண்டு, ''என்ன வந்தனா? எங்க சார் உன் நடிப்புத் திறமையை ரொம்பப் பாராட்டிப் பேசுகிறார்போல இருக்குதே! நான் முன்னமே சொன்னேன் இல்லையா? அதுக்காகவே தான் அவர் வந்தார்!'' என்றான் அமர்த்தலாக.

முத்துசிவனின் முகத்தில் அசடு வழிந்தது. ரட்சகனைப் பட்டும் படாமலும் பார்த்துப் புன்னகை பூத்தான் அவன். வந்தனா அவ்விருவரையும் நோக்கிக் கள்ளச் சிரிப்பு சிரித்துக் கொண்டிருந்தாள். **(தொடரும்)**

---

# தேர்தல் துக்கடா!

விரைவில் மேற்கு வங்காளம், பீஹார், பஞ்சாப், உத்தரப் பிரதேசம் ஆகிய மாநிலங்களில் நடைபெறவிருக்கும் இடைத் தேர்தல்களில் காணப்படும் சிலவிநோதங்கள்:

மேற்கு வங்காளத்தில் போட்டியிடும் வேட்பாளர்களில் ஒரு கணிசமான பகுதியினர் பிரம்மச்சாரிகள். இங்கு போட்டியிடும் முன்னாள் முதலமைச்சர்கள் திரு பி. சி. சென், டாக்டர் பி. சி. கோஷ், திரு அஜய் குமார் முகர்ஜி ஆகிய மூவரும் பிரம்மச்சாரிகளே. இம்மாநிலத்தில் போட்டியிடும் புரட்சி சோஷலிஸ்டு கட்சியின் பதினேழு வேட்பாளர்களில் பன்னிரண்டு பேர் பிரம்மச்சாரிகளே. எல்லோருக்கும் வயது நாற்பதுக்கு மேல்.

பீஹார் மாநிலத்தில் நாற்பது பெண்கள் தேர்தல் போட்டியில் ஈடுபடுகிறார்கள். இரண்டு தொகுதிகளில் பெண்கள் ஒருவரை ஒருவர் எதிர்த்து நிற்கிறார்கள். இவற்றுள் சில்லி என்னும் தொகுதியில் நிற்கும் பெண் வேட்பாளர் ஒருவரை எதிர்த்துப் பத்துப் பேர் போட்டியிடுகிறார்கள். அரா என்னும் தொகுதியிலோ பெண் வேட்பாளர் ஒருவரை எதிர்த்துப் பன்னிரண்டு ஆண்கள் போட்டியிடுகிறார்கள்!

மேற்கு வங்காளத்தில் உள்ள மூர்ஷிதாபாத், பெஹராலா என்னும் தொகுதிகளில் சகோதரர்கள் இருவர் ஒருவரை யொருவர் எதிர்த்துப் போட்டியிடுகிறார்கள். இம்மாநிலத்தில் செருப்பு தைக்கும் தொழிலாளி ஒருவரும் கல்கத்தாவைச் சேர்ந்த தொகுதி ஒன்றிலிருந்து போட்டியிடுகிறார். பாரத நாட்டின் தேர்தல் சரித்திரத்திலேயே முதன் முறையாக ஒரு வேட்பாளர் டேப் ரிகார்டர் மூலம் வாக்காளர்களுடன் பேசுகிறார். இவர் ஸ்ரீ ஹுமாயூன் கபீர்.

பீஹாரில் உறவினர்கள் ஒருவரை ஒருவர் எதிர்த்துப் போட்டியிடுகிறார்கள். சியோஹர் என்னும் தொகுதியில் போட்டியிடும் காங்கிரஸ் வேட்பாளர் தம் மாமாவை எதிர்த்துப் போட்டியிடுகிறார். அமாபூர் என்னும் தொகுதியில் நிற்கும் காங்கிரஸ் வேட்பாளர் முகம்மது தாஹிர் என்பவரை எதிர்த்து அவரது சகோதரியின் கணவரே போட்டியிடுகிறார்.

பீஹாரில் போட்டியிடும் கட்சிகளின் எண்ணிக்கை எவ்வளவு தெரியுமா? இருபத்திரண்டு!

பஞ்சாபில் எல்லாத் தொகுதிகளிலும் போட்டியிடும் கட்சி ஒன்றுகூட இல்லை!

இம்மாநிலத்தில் முன்னாள் முதன் மந்திரிகள் குர்னாம் சிங்கும் லட்சுமண் சிங்கும் ஒருவரை ஒருவர் எதிர்த்து ஒரே தொகுதியில் போட்டியிடுகின்றனர். தகவல்: எறும்பு





சிறுவர் விருந்து

தயாரிப்பு:
வாண்டுமாமா

:: 28 ::

'என்னைப் பிடிக்க முடியுமா?' என்று கேட்கிறார் குரங்கார். 'நீ எங்கே இருந்து பேசுகிறாய் என்றே எனக்குத் தெரியவில்லையே' என்கிறான் கருப்பன். பாவம்! அவனுக்கு வழி தெரியவில்லை. உங்களால் குரங்கின் இருப்பிடத்துக்குக் கருப்பனைக் கூட்டிப் போக முடியுமா?

## தெரியுமா, முடியுமா ?

ஃ மிக அதிகமான கால்களுள்ள பூச்சி, புழு எது? மரவட்டையா, பூரானா?

(விடை: இரண்டுமேயல்ல. மண் புழுக்குத்தான் அதிகமான கால்கள். சுமார் 1200.)

ஃ ஒரு டன் இரும்பை ஒருவர் அறாக் கிரனைதயாகப் போட்டு விட்டார். அது முழுவதும் துருவாகி வீணாகிப் போயிற்று. இப்போது அதன் நிறை எவ்வளவு?

(விடை: மூன்று டன்கள்)

ஃ எந்த ஒரு கடிகாரம் நாளில் இரண்டு தடவைகள் மட்டும் சரியான நேரத்தையும் மற்றபோதெல்லாம் தவறாகவும் மணி காட்டும் ?

(விடை: நின்றுபோன கடிகாரம்)

ஃ ஒன்று முதல் ஒன்பது வரையுள்ள இலக்கங்கள் ஒரே ஒரு தடவைதான் வர வேண்டும். அப்படிப்பட்ட ஒரு எண்ணினால் அதே போன்ற வேறொரு எண்ணைப் பெருக்கினால் வரும் விடையிலும் அந்த ஒன்பது இலக்கங்கள் ஒரே ஒரு தடவை வந்திருக்க வேண்டும்? அந்த எண்கள் என்ன?

(விடை: 246913578 × 987654312 = 493827156)

ஃ ஓர் ஐந்தெழுத்து ஆங்கில வார்த்தை. அதில் நான்கு எழுத்தை நீக்கிவிட வேண்டும். அப்போதும் அதன் பொருள் மாறக் கூடாது. அது என்ன வார்த்தை ?

(விடை: Queue)

## சொல்லடுக்கு - விளையாட்டு

இந்த விளையாட்டு ரொம்பச் சுவாரஸ்யமாக இருப்பதோடு மொழியில் உங்களுக்குள்ள ஞானத்தை வளர்க்கும். வெளியில் சுற்றாமல் வீட்டிற்குள்ளிருந்தபடியே விளையாடுவதற்கு ஏற்றதும் கூட. இதை இருவர், பலபேர் சேர்ந்து விளையாடலாம். ஒவ்வொரு ஆட்டக் காரிடமும் கீழே குறித்துள்ளபடி 25 கட்டங்கள் கொண்டதோர் சதுர வரை படம் இருக்க வேண்டும். ஒவ்வொரு ஆட்டக்காரரும் தங்கள் முறைக்கு ஏதாவது ஓர் எழுத்தைக் கூற வேண்டும். அதை எல்லாரும் தங்களிட முள்ள கட்டங்களுக்குள் எங்காவது ஓரிடத்தில் எழுதிக் கொள்ள வேண்டும். இப்படி ஒவ்வொருவரும் கூறும் எழுத்துக்களை ஒன்று சேர்த்து மூன்று நான்கு, ஐந்து எழுத்துக் கொண்டதோர் வார்த்தையை உருவாக்க வேண்டும். கட்டங்களின் மேலிருந்து கீழோ, இடமிருந்து வலமோ எப்படியும் இந்த வார்த்தையை அமைக்கலாம். எத்தனை வார்த்தையை உருவாக்குகிறீர்களோ அத்தனை 'பாயிண்ட்'. 25 கட்டங்களும் அடைக்கப் பட்டதும் ஆட்டம் முடிவு பெறும். ஒவ்வொருவரும் தாம் உருவாக்கிய வார்த்தைகளைக் கூட்டி ஸ்கோர் கணக்கிடலாம். ஐந்து எழுத்து வார்த்தைக்கு 5 பாயிண்ட், 4 எழுத்து வார்த்தைக்கு 3 பாயிண்ட், 3 எழுத்து வார்த்தைக்கு ஒரு பாயிண்ட் என்று கணக்கிடவும்.

# கேளாத ஒலி

'நாம் கேட்க முடியாத ஒலி!' என்று ஒன்றிருக்கிறதா என்று ஆச்சரியப்பட வேண்டாம்! ஆம்; நாம் கேட்க முடியாத ஒலி இருக்கவே இருக்கிறது! இவ்வொலி விநாடியில் இருபதாயிரத்துக்கு மேற்பட்ட முறை அதிர்வதால், இவ்வொலியினை நமது செவியிலுள்ள ஜவ்வினால் பகுத்துணர முடிவதில்லை. இதனால்தான் நம்மால் இவ்வொலியினைக் கேட்க முடிவதில்லை. நாம் கேட்க முடியாத ஒலியினைக் 'கேளா ஒலி' என்றழைப்பது மிகவும் பொருத்தமாயிற்றே! ஆங்கிலத்தில் இவ்வொலியினை (Ultrasonics) என்று அழைக்கின்றனர்.

இவ் ஒலியை மனிதர்களால்தான் கேட்க முடிவதில்லை! வௌவால், கேளா ஒலியை உற்பத்தி செய்யவும், உணரவும் வல்ல உறுப்புக்களைப் பெற்றுள்ளது! வௌவாலுக்குக் கண்ணிருந்தும் பயனில்லை! பறக்கும் போது வௌவால் 'கேளா ஒலி'யை உற்பத்தி செய்கிறது. இவ்வொலி வௌவால் பறக்கும் வழியிலுள்ள தடுப்புப் பொருட்கள் மீது பட்டு எதிரொலிக்கப்பட்டு வௌவாலை அடைகிறது. வௌவால் எதிரொலிக்கப்பட்ட ஒலியின் தன்மையை உணர்ந்து அதற்கேற்பப் பொருள்களின் மீது படாமல் தங்கு தடையின்றிப் பயணம் செய்கிறது!

கேளா ஒலியை உற்பத்தி செய்யப் பல கருவிகள் பயன்படுத்தப்படுகின்றன. இவற்றுள் கால்டன் விசில் (Galton's Whistle) ஹார்ட்மன் ஜெட் ஆசிலேட்டர், (Hartman's Jet Oscillator) போன்ற கருவிகளை முக்கியமானவையாகக் கூறலாம்.

கேளா ஒலி பயணம் செய்ய ஓர் ஊடகம் (Medium) தேவைப்படுகிறது. சாதாரண ஒலியலைகளைப் போன்றே கேளா ஒலியலைகளும் ஒலிப் பிரதிபலிப்பு, ஒலி முறிவு, ஒலி ஈர்ப்பு முதலிய குணங்கள் வாய்க்கப்பெற்றுள்ளன.

கேளா ஒலியின் பயன்கள் பலப் பல. கேளா ஒலி பயன்படாத துறையே இல்லை என்று சொல்லுமளவுக்கு எல்லாத் துறைகளிலும் பயனாகின்றது.

கேளா ஒலித் தத்துவத்தைப் பயன்படுத்தி 'சோனார்' (Sonar) என்ற கருவி இரண்டாவது உலக யுத்தத்தின்போது தயாரிக்கப்பட்டது. இரண்டாவது உலகப் போரில் இன்னல் பல விளைத்த நீர்மூழ்கிக் கப்பல்களைக் கண்டறிய இக்கருவி பெரிதும் பயன்பட்டது. கடலின் ஆழத்தை அறியவும், மீன்கள் கூட்டத்தைக் கண்டறியவும் இக் கருவி இன்று பயன்படுத்தப்படுகிறது)

தொழிற்சாலைகளில் உள்ள கருவிகளில் ஏற்படும் பழுதுகளைக் கண்டறியக் கேளா ஒலி ஒரு கண்டறியும் கருவியாகப் பயனாகின்றது. கண்ணால் காண முடியாத மிக மிக நுண்ணிய பொருள்களைப் பன்மடங்கு பெரிதாக்கிக் காண, கேளா ஒலி நுண்பெருக்கி (Ultrasonic Microscope) ஒன்றும் உருவாக்கப்பட்டுள்ளது.

உருளைக் கிழங்குத் தாவரங்களை அதிக அளவில் பயிராக்கவும், கம்பளித் துணிகளை வெளுக்கவும்கூடக் கேளா ஒலி பயனாகிறது!

மருத்துவத் துறையில் கேளா ஒலி பல விதங்களில் பயனாகின்றது. கொடிய நுண்ணுயிர்களைக் கொல்லவும், இயல்பாகக் கலக்காத இரு திரவங்களைக் கலக்கவும், பல உயிரிகள் பொருட்களைத் தயாரிக்கவும் கேட்க முடியாத ஒலி பயன்படுத்தப்படுகிறது.

அறுவைச் சிகிச்சைகளில் ஆபத்தில்லாத வகையில் கத்தி, கத்திரி முதலிய உபகரணங்களுக்குப் பதிலாகக் கேளா ஒலி பயன்படுத்தப்படுகிறது!

மூளையில் தோன்றும் கட்டிகளை அழிக்கவும் கேளா ஒலி பயனாகின்றது. மிகவும் குறைந்த ஆற்றலுடைய கேளா ஒலியலைகளை பயன்படுத்தப்படுவதால் மூளையின் பிற பகுதிகள் பாதிக்கப்படுவதில்லை.

பல்லின் பழுதடைந்த பாகத்தைக் களைந்தெறிய, 'கேவிட்ரான்' (Cavitron) என்ற கேளா ஒலிக் கருவி பயனாகின்றது. பெருமூளையின் (Cerebrum) இயல்பைக் கண்டறியவும், ஆபத்து விளைக்கும் சதை வளர்ச்சிகளை நீக்கவும் கேளா ஒலி பயனாகின்றது.

இருதயத்தின் இயக்கத்தைச் செம்மைப்படுத்தவும், பழுதடைந்த இருதய வால்வுகளைக் குணப்படுத்தவும் மருத்துவ நிபுணர்கள் கேளா ஒலியைப் பயன்படுத்துகின்றனர்.

இன்னும் சில நாட்களில் நம் வீட்டைப் பெருக்கவும், வீட்டுப் பாத்திரங்களைச் சுத்தப்படுத்தவும் கேளா ஒலி பயன்படுத்தப்பட்டாலும் நாம் ஆச்சரியப்படுவதற்கில்லை!

கேளா ஒலியின் மகிமையே மகிமை!

— ப. கா. பாலசுப்பிரமணியம்



# ஆல்விடோன்

## குறைந்த செலவில் அதிக ஆரோக்கியம்!

இதர உணவு பானம் எதையும் விட விலை குறைந்தது ஆல்விடோன். இருந் தும் அதில் ஆரோக்கியம் அளிக்கும் பொருள்கள் குறைவில்லாமல் இருக் கின்றன.

ஆல்விடோனில் மட்டுமே புரதச் சத்து நிறைந்த பாதாம் அடங்கியிருக்கிறது. பார்லிமால்ட், ஆடைச் சத்து நிறைந்த பால், கொக்கோ ஆகியவற்றைக் கொண்டு தயாரிக்கப்படுவது ஆல் விடோன். வைட்டமின் ஏ. பி, பி2, மற்றும் டி. இரும்புச் சத்து, கால்சியம் நிறைந்தது.






உடலுக்கு உற்சாகம் அளிப்பது ஆல்விடோன். நரம்புகளுக்கு வலு வூட்டுகிறது. நோயாளிகள், குழந்தைகள், பாலூட்டும் தாய் மார்களுக்கு ஏற்ற உணவு பானம்.

*தயாரிப்பவர்கள்:*
**ஆல்விடோன் லாபாரடரீஸ்**
மதராஸ்-43.

# ஊட்டியில் ஒரு டியூட்டி

எஸ். ஜி. அர்



தனியாக ஊட்டிக்கு வந்திருந்த ஸ்ரீதருக்கு வந்த மூன்று நாட்களுக்குள்ளேயே ஊட்டி அலுத்து, சலித்து, புளித்துப் போய்விட்டதென்றால் அதற்கு முக்கியமான காரணம்:

'உறவின்றி (கவனிக்க: உறவு — காதல் உறவு) ஊட்டிக்குச் செல்ல வேண்டாம் என்ற புது மொழியைப் புறக்கணித்து, தன்னைத் தனியாகப் புறப்பட்டு வந்ததுதான்.

அதுவும் இருபத்தைந்து வயதுக் காளை, குளிரோடு கொள்ளையழகு படைத்த ஊட்டியில் — திரும்பிய இடமெல்லாம் காதல் ஜோடிகள் உலவுகிற ஊட்டியில் தன்னந் தனியாக இருப்பதைப் போன்ற நரகம் வேறு இருக்க முடியுமா ?

ஆனால் ஸ்ரீதருடைய அலுப்பு, சலிப்பு புளிப்பு அத்தனையும் மறு நாள் காலையே ஊட்டியில் பெய்த மழைத் தண்ணீராக, நொடியில் இருந்த இடம் தெரியாமல் ஓடி மறைந்தன. அது மட்டுமா? நான்காம் நாள் பொழுது விடிந்த சில மணி நேரத்துக்குள் ஊட்டி நரகம் (கவனிக்க: தனியாகச் செல்லும் இருபத்தைந்து வயது வாலிபனுக்கு ஊட்டி நரகம்தான்!) சொர்க்க லோகமாகக் காட்சியளிக்கத் தொடங்கியது.

வழக்கம்போல், ஜோடியாகத் திரியும் கொடுத்து வைத்தவர்களை முறைத்துக் கொண்டே 'போட் ஹவுஸ்'ஸுக்கு வந்து



சேர்ந்தான் அவன். ஒரு படகை எடுத்துக் கொண்டு ஆத்திரம் நீர ஏரியில் சுற்றலாம் என்ற எண்ணத்தில் (இங்கே படகை நம் கையிலேயே ஒப்படைத்து விடுவார்கள். நாமே ஓட்டிச் சென்று மகிழலாம்!) கௌண்டருக்கு அருகில் சென்று, தன் பெயரைப் பதிவு செய்து கொண்டான். படகு காலியானவுடன் வரிசைக்கிரமமாக அவன் பெயரைக் கூப்பிடுவார்கள்.

பெயரைப் பதிவு செய்துவிட்டு, புல்வெளிக்கு வந்தவன் கண்கள் திடீரென்று விரிந்தன என்றால், அழகாகக் காட்சி தரும் பச்சைப் பசேல் என்ற புல்வெளியைப் பார்த்ததால் அல்ல. அந்தப் புல்வெளியின் மேல் ஐந்தடி உயரத்துக்கு அழகோவியமாக நின்று கொண்டிருந்த ஓர் உயிர்ச் சிலையைப் பார்த்ததால்தான்.

அவளைப் பார்த்த மறுகணமே அவன் ஊட்டிக்கு வந்ததின் முழுப் பயனையும் அடைந்து விட்டான். 'ஊட்டி அழகு என்று பிதற்றுகிறார்களே இந்த 'பியூட்டி'யை விடவா?

அவன் உள்ளம் குதி போட, கால்கள் நகர்ந்தன அவள் பக்கமாக.

பக்கத்திலே வந்த பிறகு தான் தெரிந்தது, அந்தப் பாவைக்குப் பக்கத்திலிருந்த உருவம். 'மக்களுக்குச் சத்துரு மாதா, பிதா' என்று யாரோ சொல்லி யிருக்கின்றனர். ஆனால் ஸ்ரீதர் அகராதிப்படி 'காதலுக்குச் சத்துரு மாதா, பிதா' என்பது தான்.

அந்த வயதான மனிதர், அந்தப் பெண்ணுக்குக் காவல் போல் அத்தனை அருகில்நின்று கொண்டிருந்தால், அவனுக்குக் கோபம் வராதா?

மெள்ள அந்தப் பெரியவரை நோக்கிப் புன்னகையொன்றைத் தவழ விட்டு விட்டு, அவரிடம் பதில் புன்னகை வருகிறதா என்று காத்திருந்தான்.

புன்னகை பயங்கரமாக வந்தாலும், அவர் புன்னகையை ஏற்றுக் கொண்டார் என்பதைப் பதில் புன்னகை மூலம் தெரிவித்தார்.

''மெட்ராஸிலேயிருந்தா.....'' என்று மெள்ள அவன் பேச்சை ஆரம்பித்தான்.

அந்தப் பெரியவர் பதில் சொல்ல வாயைத் திறப்பதற்குமுன், அந்தப் பெண், "எஸ்...." என்று புன்முறுவலோடு ஒரு சொல் விடை பகன்றாள்.

அவன் உடல் முழுதும் ஒரு சிலிர்ப்பு, ஊட்டி குளிரால் அல்ல; அந்த அழகோவியத்தின் பதிலினால். அவன் அவரைக் கேட்ட கேள்விக்கு அவள் பதில் சொல்கிறாள் என்றால்?

'டேய், ஸ்ரீதர்! நீ ஊட்டிக்கு வந்தது வீண் போகவில்லையடா உன் வலையில்......'

அடுத்த வார்த்தைக்காக வாயைத் திறந்த போது, அவன் வார்த்தையை அமுக்கிக் கொண்டு வெளிவந்தது ஒலிபெருக்கியின் ஒலி: "மிஸ்டர் ஸ்ரீதர். இருபத்திநாலாம் நெம்பர் போட்...."

அதாவது அவனுக்குப் படகு தயாராக இருக்கிறது என்று அர்த்தம்.

அவன் அந்தப் பெண்ணைப் பார்த்தான். "நீங்களும் படகுக்காகத்தான் காத்திருக்கிறீர்களா?"

அவள் 'ஆமாம்' என்பது போல் மேலும் கீழும் தலையாட்டினாள்.

"அப்படியானால் நீங்கள் என் படகை எடுத்துக் கொள்ளுங்கள்....உங்கள் பெயர் வரும்போது நான் எடுத்துக்கொள்கிறேன்..."

"தேங்க்ஸ்...." என்று ஏற்றுக் கொண்டவள் அந்தப் பெரியவரோடு நடந்தாள் படகுப் பக்கம். படகு வரையில் சென்று வழியனுப்பியவன், "உங்கள் பெயர்...." என்று இழுத்தான்.

"ஓ.... சொல்ல மறந்து விட்டேனே. லலிதா...." என்று புன்னகையுடன் கூறியவாறு, அந்தப் பெரியவருடன் படகில் ஏறி அமர்ந்தாள்.

சிங்கம் இருக்க வேண்டிய இடத்தில் சிறு நரி இருந்தால் எப்படி இருக்கும் என்று கற்பனை செய்து பார்த்தான் அவன், அவளுக்குப் பக்கத்தில் அமர்ந்திருந்த பெரியவரைச் சபித்துக் கொண்டே. அந்த மனிதர் மட்டும் இல்லாவிட்டால் அந்தப் பெண்ணைப் படகில் வைத்துக் கொண்டு, ஏரி முழுவதையும் சுற்றி வரலாமே!

மறு நாள் காலை, போட் ஹவுஸில் சந்தித்த பெண்ணையே நினைத்துக் கொண்டவன், ரஸ்தாவிலே எவர் மேலோ முட்டிக் கொண்டபின்தான் சுயநினைவு பெற்றான்.

"ஓ.... நீங்களா....?" என்ற வீணையின் நாதம் எழுந்த பிறகுதான், தான் முட்டிக் கொண்டது குட்டிச் சுவரல்ல, தன் உள்ளத்திலே நடனமிடும் நங்கைதான் என்பது தெரிய வந்தது.

தலை போன ஜன்மத்தில் செய்த புண்ணியத்தை நினைத்துப் பெருமைப்பட்டுக் கொண்டே, அந்தப் பெண்ணின் தந்தை இருந்த பக்கம் நோட்டம் விட்டான். நடந்த சம்பவம் அவருக்குச் சரியாகப்படவில்லை என்பதை அவர் முகமே எடுத்துக் காட்டிற்று.

அடுத்த நாள் 'பொட்டானிகல் கார்ட'னுக்குப் போகப் போவதாக முதல் நாளே சொல்லியிருந்தாள் லலிதா.

அழகெல்லாம் ஒன்று இரண்டாற் போல் அமைந்த கார்டன். காதலர்களுக்கென்றே அமைக்கப் பட்டது போன்ற எழில்மிகு தோட்டம்.

போகாமல் இருப்பானா ஸ்ரீதர்?

மூன்று மணிக்கே கார்டனுக்கு வந்து வாயிலிலேயே காத்திருந்தான். கிழத்துக்கு டிமிக்கி கொடுத்து விட்டு லலிதாவுடன் தனியே பேசிக்கொள்ளும் வழியை மனம் அலசிக் கொண்டிருக்கக் கண்கள் வழிமேல் விழி வைத்துக் காத்திருந்தன லலிதாவுக்காக.

தூரத்தே அவள் உருவம்! 'பாடிகாட்' மறக்காமல் பக்கத்திலேயே வந்துகொண்டிருந்தது. ஸ்ரீதரின் கைகளில் சகல அதிகாரங்களையும் கொடுத்தால் அவன் முதன் முதலில் போடும் சட்டம் இதுவாகத்தான் இருக்கும்: 'நாற்பது வயதுக்கு மேற்பட்ட எவரும் ஊட்டிக்குள் நுழையக் கூடாது...'

'சே... சரியான கிழக் கோட்டான்தான். என்னதான் பெண்ணானால்தான் என்ன? இப்படியா விடாமல் அட்டை மாதிரி...நான் சுற்ற வேண்டிய அவளை இந்தக் கிழம் சுற்றுவதா? இங்கிதம் தெரியாத ஜன்மம்!'

அவன் உள்ளம் திட்டிக் கொண்டிருந்தது.

"வந்து ரொம்ப நேரமாகி விட்டதா?" அவள்தான் கேட்டாள்.

அந்தக் குரலில் உள்ளம் சிறிது சாந்தம் அடைய, "இல்லை. இப்பொழுதுதான்..." என்றான் புன்னகை தவழ.

மூவரும் கார்டனுக்குள் நுழைந்தனர்.

பல தேசங்களிலுமிருந்து வரவழைக்கப் பட்டிருந்த பல வகையான மரங்களை எல்லாம் பார்த்துக் கொண்டே வந்தனர்.

வேண்டுமென்றே கிழத்தை இழுத்துக் கொண்டு 'சுற்று சுற்று என்று' சுற்றினான். வயதான கிழம், சீக்கிரமே கால் வலி என்று உட்கார்ந்து விடும். பிறகு தானும் லலிதாவுமாக மற்ற இடங்களுக்குத் தனியாகப் போகலாம் என்பது அவனது திட்டம்.

அவன் திட்டம் பலிக்கும் கட்டத்தை நெருங்குவது போல் தோன்றியது. கிட்டத் தட்ட கிழத்துக்கு மூச்சு வாங்காத குறைதான்.

மூவரும் புல் தரையில் அமர்ந்தனர். உட்கார்ந்த ஐந்து நிமிஷங்களுக்குள் அவன் எழுந்து விட்டான். "இந்தக் கார்டனில் இன்னும் பார்க்க வேண்டிய இடங்கள் எவ்வளவோ இருக்கின்றன" என்றவாறு குறிப்பாக லலிதாவையும் கிழத்தையும் மாறி மாறிப் பார்த்தான்.

அவன் எதிர்பார்த்தது லலிதா மட்டும் எழுந்திருப்பாள், கிழம் கால் வலிக்கிறது என்று அங்கேயே உட்கார்ந்து விடும் என்று.

ஆனால் லலிதாவை முந்திக் கொண்டு கிழம் தான் முன்னால் எழுந்தது. எழுந்தது மட்டுமின்றி, "இந்த ஊட்டியில் ஒரு விசேஷம் பார்த்தீர்களா? எத்தனை மைல் நடந்தாலும் கால் வலியே தெரிவதில்லை. ஏதாவது மூலிகைகள் இருக்குமோ என்னமோ இங்கே" என்றவாறு அவனுடன் நடக்கத் தயாராயிற்று.

திரும்பி வரும்பொழுது அவன் அவளிடம் கேட்டான்: "நாளைக்குத் தொட்ட பெட்டா போய் வரலாம். வருகிறீர்களா?"

'உங்க அப்பாவை எட்ட இருக்கச் சொல்லி விட்டு நீ மட்டும் வருவதானால் தொட்ட பெட்டா என்ன, எந்தப் பெட்டாவுக்கும்

# எவராலும் நெருங்கமுடியாத முதலிடம்




★ கச்சிதமான நயம்
★ ஒப்பற்ற சுவை
★ முரமுரப்பான புதுமை
★ ஈடிணையற்ற போஷாக்கு

## பார்லே க்ளுகோ
பிஸ்கட்டுகள்




பார்லே க்ளுகோ இந்தியாவிலேயே உன்னத
விற்பனையுள்ள பிஸ்கட்டாக விளங்குவதில் வியப்பில்லை!

# தவறாது உபயோகித்தால் போர்ஹான்ஸ் பற்பசை ஈறு உபாதைகளை நிறுத்தி, பற்சிதைவைத் தடுக்கிறது

சிறியோர், பெரியோர், யாவரிடமிருந்தும் தாமாகவே தேடி வந்த நற்சாட்சித் கடிதங்கள், ஈறு உபாதைகளையும், பற்சிதைவையும் தடுப்பதிலே போர்ஹான்ஸ் பற்பசையின் வியக்கத்தக்க வெற்றியைப் போற்றுகின்றன. இந்த நற்சாட்சிக் கடிதங்களை ஜெப்ரி மானேர்ஸ் & கோ. லிட். கம்பெனியாரின் எந்த ஆபீஸிலும் காணலாம்.

"பல் நோய்களால் நான் அவதிப்பட்டுக் கொண்டிருந்தேன்.. உங்களுடைய போர்ஹான்ஸை உபயோகித்துப் பார்த்தேன்.... இப்போது எனக்கு அந்த நோய்களின் அவதியில்லை. அநேகமாக 20 முதல் 25 நபர்கள் போர்ஹான்ஸ் உபயோகிக்கத் தொடங்கி விட்டனர். என் குடும்பத்தில் போர்ஹான்ஸ் தனி இடம் பெற்று விட்டது.

—உதயசங்கர் திவாரி, பாட்னா.

"விஞ்ஞான முறையில் தயாரிக்கப்படும் உங்கள் போர்ஹான்ஸ் பற்பசையை நான் கடந்த பத்து வருடங்களாக உபயோகித்து வருகிறேன். அது எனது ஈறுக் கோளாறுகளையெல்லாம் அகற்றி விட்டது. இப்போது என் குடும்பத்தினர் யாவருமே போர்ஹான்ஸ் பற்பசை கொண்டு பல்துலக்குகிறார்கள்".

—எஸ். எம். லால், புது டில்லி.

## போர்ஹான்ஸ்

**பல் வைத்தியரொருவரால் உருவாக்கப்பட்ட பற்பசை.**

பற்களைத் தக்கமுறையில் பராமரிக்க இரவிலும், காலையிலும் போர்ஹான்ஸ் பற்பசையையும், போர்ஹான்ஸ் டபிள்-ஆக்ஷன் டூத் பிரஷையும் உபயோகியுங்கள்.... உங்கள் பல் வைத்தியரையும் தவறாது பார்த்து வாருங்கள்!



இலவசம்! "பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை" என்ற வண்ணப் புத்தகம்.

தமிழ், ஆங்கிலம் இரண்டிலும் கிடைக்கும். இப்புத்தகத்தைப் பெற, (தபால் செலவுக்காக) 15 பைசா தபால் தலைகளை இக் கூப்பனுடன் அனுப்புங்கள்: மானேர்ஸ் டென்ட்டல் ப்யூரோ, தபால் பை 10031, பம்பாய் 1.

பெயர்________ வயது________

விலாசம்________

மொழி________ K 6

54 F-172 TM

வரத் தயார்? இந்தக் கிழம்தான் விடாமல் கிட்டக் கிட்ட வந்து கொட்டக் கொட்ட விழிக்கிறதே...' என்று சொல்ல வேண்டும் போலிருந்தது, அவனுக்கு.

மறு நாள்!

லலிதாவை எங்கேயும் காணுமல், கடைசியில் அவள் தங்கியிருந்த ஹோட்டலுக்கே வந்து விட்டான் ஸ்ரீதர். அவளைத் தேடிக் கொண்டு அங்கே வந்தவனுக்கு ஆச்சரியம் தான் காத்திருந்தது.

லலிதா அறையைக் காலி செய்து கொண்டு போய் அரை மணிக்கு மேலாகி யிருந்தது.

ஒருவேளை ஊருக்குப் புறப்பட்டு விட்டாளோ? அவனிடம் கூடச் சொல்லாமலா?

கால்கள் ஸ்டேஷனை நோக்கி ஓடிக்கொண்டிருந்தன. ஸ்டேஷனுக்குள்ளே, நின்று கொண்டிருந்த ரயிலுக்குள்ளே—

அவன் நினைத்தது சரிதான்!

வண்டி கிளம்ப இரண்டே நிமிடங்கள் இருந்தன.

மூச்சு இறைக்க ஓடி வந்தவன், ''என்ன இது... சொல்லாமல் கொள்ளாமல் கிளம்பி விட்டீர்கள்?'' என்றுன் படபடப்புடன்.

''சொல்லிக் கொண்டு கிளம்புகிறதுபோல் தான் வைத்துக்கொள்ளவில்லையே நீங்கள்...'' என்றுள் அவள் வருத்தத்துடன்.

அவனுக்கு ஏதும் புரியவில்லை. தலையைப் பெட்டிக்குள் நீட்டி, அந்தக் கிழம் இருக்கிறதா என்று நோட்டம் விட்டான். கண்ணுக்கெட்டிய தூரம் வரையில் அந்தக் கிழத்தின் சாயலே இல்லை.

''நீங்கள் மட்டும் தனியாகவா கிளம்புகிறீர்கள்? அப்பா இல்லை...?''

''அப்பாவா...?'' என்றுள் அவள் தன் விழிகளைப் பெரிதாக்கி. ''அப்பா மெட்ராஸில் அல்லவா இருக்கிருர். ஊட்டிக்கு நான் மட்டும்தானே வந்தேன்!''

இந்த முறை அதிர்ச்சியடைய வேண்டியது அவன் முறையாயிற்று. ''அப்படியானுல் உங்கள் கூடவே அட்டை போல் சுற்றிக் கொண்டிருந்தாரே, அவர்...''

''அவரா?'' என்றவள், ''யாருக்குத் தெரியும்? பாவம், வயதானவர். ஊட்டியைப் பார்க்கத் தனியாக வந்திருக்கிருர். காது வேறு கேட்காதாம். அதனுல் தம்மையும் வெளியே அழைத்துச் செல்லும்படி கேட்டுக் கொண்டார். வயதானவராயிற்றே, பாவம் என்று என் கூட வெளியே அழைத்து வந்தேன்; அவ்வளவுதான். அதைத் தவிர எனக்கும் அவருக்கும் ஒரு சம்பந்தமும் கிடையாது...''

'அடே, ஸ்ரீதர்... நீ ஒரு முட்டாள்டா... அந்த மனிதரைப் போய் அவள் அப்பா என்று நினைத்துக் கிடைத்த சந்தர்ப்பங்களையெல்லாம் வீணடித்துவிட்டாயேடா...அந்தக் கிழத்துக்குக் காது வேறு கேட்காதாம்...அது தெரியாமல், அவளோடு பேசக்கூட நீ பயந்தாயே...' என்று அவன் உள்ளம் ஓலமிட்டுக் கொண்டிருக்கும்போதே அவள் சொன்னுள்:

''உங்களை முதல் நாள் 'போட் ஹவுஸ்'ஸில் பார்த்தவுடனேயே உங்களுடன் பழக வேண்டும் என்று விருப்பப்பட்டேன். நீங்களோ படகில் என்னேடு வராமல் அந்தப் பெரியவரோடு என்னை அனுப்பி விட்டீர்கள்;




'' மாணவர்களே ! இதுதான் முதல் பாடம். பாட்டரி வீக்காக உள்ள காரைக் கிளப்புவது இப்படித்தான் !''

அடுத்த நாள் பொடானிகல் கார்டனிலாவது ஒரு வார்த்தை அன்பு ததும்பப் பேசுவீர்கள் என்று நினைத்தேன். நீங்கள் என்னடாவென்றால், அந்தப் பெரியவரையே பார்த்துக் கொண்டிருந்தீர்கள். தொட்டபெட்டாவுக்காவது உங்களோடு தனியாகச் சென்று என் உள்ளத்தைத் திறந்து காட்டலாம் என்று எண்ணினேன். அதற்கும் நீங்கள் இடம் கொடுக்கவில்லை. மொத்தத்தில் இந்த அனுபவங்களினுல் நான் கண்டது: உங்களுக்கு என்னைப் பிடிக்கவில்லை. ஆகவே எனக்கும் ஊட்டியைப் பிடிக்கவில்லை. கிளம்பி விட்டேன் ஊருக்கு...''

ரயில் 'கூ' வென்ற சப்தத்தோடு நகரத் தொடங்கியது.

''மிஸ் லலிதா...'' என்று ஏதோ சொல்ல அவன் வாயெடுக்கு முன் ரயில் அவர்கள் இருவருக்கு மிடையேயுள்ள இடைவெளியை அதிகப் படுத்திக் கொண்டிருந்தது.

எவர் மேல் கோபப்படுவது என்று தெரியாமல் அவன் வெளியே வந்தபொழுது எதிர்ப்பட்ட உருவம் — பெரியவர்! அவன் வயிற்றெரிச்சலுக்குக் காரணமான அதே கிழம்!

அவன் முறைத்த முறைப்பைக் கண்ட அந்தப் பெரியவர், ''என்ன தம்பிக்குக் கோபம். அன்று, கையைப் பலமாக அழுத்தி விட்டேன் என்று? அன்று பார் தம்பி, காலிலே ஒரு கட்டெறும்பு கடித்துவிட்டது. அதனுல்தான். தவருக நினைக்காதே... அது சரி, ஏரிக்கு வருகிருயா... போட்டை எடுத்துக்கொண்டு ஜாலியாகச் சுற்றலாம்...''- என்றுர்.

''வருகிறேன். ஆனுல் ஒன்று. போட்டை எடுத்துக் கொண்டு ஜாலியாகச் சுற்ற அல்ல.. போட்டிலே உம்மை நடு ஏரிக்குக் கொண்டு போய்க் கவிழ்க்க...'' என்றவாறு வேகமாக எதிர்த் திசையில் நடந்தான் அவன்?

அவன் கோபத்தின் உச்சத்தையும் நடையின் வேகத்தையும் கண்ட அந்தப் பெரியவர் தமக்குத் தாமே சிரித்துக் கொண்டு சொல்லிக்கொண்டார்.: அந்தப் பெண்ணேடு ஊட்டியிலே தனியாகச் சுற்ற வேண்டுமானுல் அவளை மணந்து கொண்டு வந்து சுற்று. இந்தக் குளிர் தேசத்திலே இயற்கை எழிலிலே மணமாகாத பெண்ணும் பிரமச்சாரியும் சுற்றுவது மிக மிக அபாயம். நல்ல காலம்; நான் இருந்தேன். அந்தப் பெண் தவறேதும் செய்யாமல் முழுசாக ஊர் போய்ச் சேர்ந்தாள்!


எங்கள் பலம் எஃகும்,
மக்களுமே. மனிதன் வெறும்
உணவினால் மட்டுமே உயிர்
வாழ்வதில்லை. ஆதலால்
நாங்கள் ஜாம்ஷெட்பூரில் இசை,
நடனம் மற்றும் மனிதனுடைய
உணர்ச்சிகளை வெளிப்படுத்தும்
இதர கலைகளையும் பேணி
வளர்த்து வருகிறோம்.
டாடா ஸ்டீல்

**இந்தியா ஆபீசில் 'சக்கரவர்த்தி சிவலிங்கம்' ருத்திராக்ஷ மாலை அணிந்து பளபளப்பான மேஜைமீது கொலுவீற்றிருந்தார். ஆங்கில ஐ. ஸி. எஸ். அதிகாரிக்கு அதன்மீது அவ்வளவு ஈடுபாடு. அதனால் அவர் செய்த கைங்கரியம் என்றும் மறக்க முடியாதது......!**

# திக்விஜயம் செய்த சிவலிங்கம்!

பிரபல வக்கில் ஜி. எஸ். நட்கர்ணி ஐரோப்பிய நாடுகளில் சுற்றுப் பயணம் செய்து கொண்டிருந்தார். லண்டனில் இருந்தபோது தமது நண்பர் ஸர் ஜார்ஜ் பேர்ட்வுட்டைச் சந்திக்க நினைத்தார். ஜார்ஜ் முன்பு ஐ. ஸி. எஸ். உத்தியோகத்தில் இருந்தவர். இப்போது லண்டன் 'இந்தியா ஆபீஸி'ல் பணியாற்றி வந்தார். நட்கர்ணி, ஜார்ஜின் காரியாலயத்துக்குள் நுழைந்ததுமே பிரமித்து நின்றுவிட்டார். காரணம், அங்கே பளபளப்பான ஒரு பெரிய மேஜை மீது ஒரு சிவலிங்கம் இருந்தது. அதற்கு ருத்திராக்ஷ மாலையும் அணிவிக்கப்பட்டிருந்தது. கூரையிலிருந்து தொங்கிய அலங்காரமான சர விளக்கின் ஒளி லிங்கத்தின் மீது விழுந்து அதைப் பிரகாசமாக எடுத்துக் காட்டியது.

லண்டனில் இந்தப் புனிதப் பொருளைப் பார்த்த பிறகு நட்கர்ணியால் அது பற்றி விசாரிக்காமல் இருக்க முடியுமா? நண்பர் ஜார்ஜிடம் விவரம் கேட்டார். அவரும் உருக்கமான கதையைச் சொன்னார் :

1885ல் பிலடெல்பியாவில் நடந்த உலகப்பொருட்காட்சியில் இடம் பெற இந்தியாவிலிருந்து அமெரிக்காவுக்கு அனுப்பப்பட்ட சிவலிங்கம் அது. ஆனால் அதை உலகச் சந்தையில் காட்சிப் பொருளாக வைக்க அதிகாரிகள் சம்மதிக்கவில்லை. 1886-ல் லண்டனில் நடைபெற்ற மற்றொரு உலகப் பொருட்காட்சியில் இடம் பெற சிவலிங்கம் அமெரிக்காவிலிருந்து பிரிட்டனுக்கு வந்து சேர்ந்தது. இங்கேயும் அதன் மகிமை அன்று ஆங்கிலேயரால் சரியாக உணரப்படவில்லை. சாலைக்குப் போட ஜல்லிக்கற்கள் உடைப்பதுபோல் இதையும் உடைத்துப் பாப்பி விடத் தீர்மானித்து விட்டனர்.

உடைபடக் காத்திருக்கும் பாறைகளுக்கிடையில் மிக அழகான சிவலிங்கமும் கிடப்பதை யதேச்சையாகப் பார்த்தார்



ஜார்ஜ் பேர்ட்வுட். இந்தியாவில் ஐ. ஸி. எஸ். உத்தியோகம் பார்த்திருக்கும் அவருக்கு அதன் மகிமை தெரியும். அதைப் பயபக்தியுடன் கொணர்ந்து தமது காரியாலயத்தில் பார்வையாக வைத்தார். உருத்திராக்ஷ மாலை அணிவித்தார்.

இப்போது நண்பர் நட்கர்ணியிடம் கூறினார் ஜார்ஜ்: "எனக்குச் சீக்கிரமே அறுபத்தைந்து வயதாகி விடும். 'இந்தியா ஆபீஸி'லிருந்து ஓய்வு பெற்று விடுவேன். இந்தச் சிவலிங்கம் பிறகு என்ன ஆகுமோ என்று நினைத்தால்தான் கவலையாக இருக்கிறது. இதைப் பத்திரமாக இந்தியாவுக்கு அனுப்பி வைக்க ஆகும் செலவை நான் ஏற்கத் தயார். நீங்கள் இதை இந்தியாவில் ஏதாவது ஒரு புனித இடத்தில் முறைப்படி பிரதிஷ்டை செய்ய ஏற்பாடு செய்ய இயலுமா?"

இந்தியா திரும்பிய நட்கர்ணி ஸ்ரீ ஆத்மாநந்த சரஸ்வதி ஸ்வாமிகள், பண்டிட் கணபியாம சர்மா முதலானோருடன் கலந்தாலோசித்து அயல்நாட்டிலிருந்து சிவலிங்கத்தை இங்கே தருவிப்பது சாஸ்திர விரோதமாகாது எனத் தெளிந்தார். தமது நண்பர் ஜார்ஜுக்கு எழுதிச் சிவலிங்கத்தைத் தருவித்தார். கார்வாரிலிருந்து முப்பத்தைந்து மைல் தூரத்தில் கோகர்ணம் என்ற ஊரில் பிரதிஷ்டை செய்யப்பட்டது சிவலிங்கம்.

இந்தப் புனித விழாவின் போது லண்டனிலிருந்து ஜார்ஜ் அனுப்பிய செய்தியில், "இந்தச் சிவலிங்கம் உலகின் பல நாடுகளுக்கும் திக்விஜயம் செய்து பல இன்னல்களுக்கு உட்பட்டாலும் இறுதியில் வெற்றியுடனும் புகழுடனும் பத்திரமாகத் திரும்பியிருக்கிறது. ஆகவே இதனைச் சக்கரவர்த்தி சிவலிங்கம் என அழைப்பது பொருந்தும்" என்று எழுதியிருந்தார்.

அதன்படி அந்த ஊர்வாசிகள் இன்றைக்கும் இந்தச் சிவலிங்கத்தை "சக்கரவர்த்திசிவலிங்கம்" என்றே அழைக்கிறார்கள்.

**-வி. எஸ். ஷங்கர்**






## அண்ணலின் வாழ்விலே...

கங்கைக் கரையில் மட்டுமல்ல; நர்மதை நதிக் கரையிலும் ஒரு குகன் உண்டு !

1933ஆம் ஆண்டு டிஸம்பர் மாதம் நிகழ்ந்தது இந்தச் சம்பவம்.

மகாத்மா காந்தியின் ஹரிஜனப் பணி வலுப் பெற்றிருந்த காலம். தமது இந்த இயக்கத்தைப் பெருக்குவதற்காக அவர் மத்தியப் பிரதேசத்தில் சுற்றுப் பயணத்தை மேற்கொண்டிருந்தார்.

கரேலி என்னும் இடத்திலிருந்து சாகர் மாவட்டத்தைச் சேர்ந்த தேவ்ரி என்னும் இடத்துக்குப் போவதென்று திட்டம். அதற்கு மத்தியப் பிரதேசத்துக் கங்கையான நர்மதையைப் படகில் கடந்தாக வேண்டிய கட்டம்.

எனவே, காந்தியடிகள் தம் கூட்டாளிகளுடன் பமனி கட்டத்துக்கு (படகுத்துறை) வந்து சேர்ந்தார். அவர்களோடு உரையாடிய வண்ணம் படகில் ஏறி உட்கார்ந்தார். காலஞ்சென்ற ரவிசங்கர் சுக்ல போன்ற எத்தனையோ மத்தியப் பிரதேசத்துத் தலைவர்களும் அவரது ஆக்க வேலையில் கைகொடுத்து உதவுவதற்காக வந்திருந்தார்கள்: எல்லோரும் ஏறி உட்கார்ந்து எத்தனையோ நேரமாகியும் படகு புறப்படும் அறிகுறியையே காணோம். பொறுமை உபதேசம் செய்யும் மகாத்மாவே பொறுமை இழந்து விட்டார் ! காரணம் விசாரித்து வர ரவிசங்கர் சுக்லவை ஏவினார்.

சிறிது நேரத்துக்கெல்லாம் சிரித்த முகத்துடன் வந்த ரவிசங்கர் சுக்ல, "பாபுஜி ! காலம் மாறிவிட்டது!" என்றார்.

"என்ன?"

"இது கலியுகம் என்று நாம்தான் தப்புக் கணக்குப் போட்டுக் கொண்டிருக்கிறோம் ! திரும்பத் திரேதா யுகம் ஆரம்பமாகிவிட்டது என்பதை இப்பொழுதுதான் புரிந்து கொண்டேன் !" என்றார் சுக்ல.

"என்ன புதிர் போடுகிறீர்கள் ?"

"புதிர் போடவில்லை, பாபுஜி ! துளஸிதாசர் திரேதா யுகத்தில் கங்கைக் கரைக் காட்சியை வர்ணித்திருக்கிறாரே, தெரியுமா ? அப்படி நடந்துகொள்ள ஆசைப் படுகிறார்கள் படகோட்டிகள்!"

சுக்ல நினைவுபடுத்திய காட்சி இதுதான்:

ஸ்ரீராமர் கங்கையைக் கடக்கப் பரிசல் வேண்டிய தருணம். 'கணக்கிறந்த நாவாய்'தனை குகனுக்கு ஆணையிடுகிறார். ஆனால் அவன் ஆக்ஞைக்குட்பட்ட படகோட்டியோ படகை அவிழ்க்க மறுக்கிறான்! காரணம், ஸ்ரீ ராமரின் கால் கழுவிய நீரைப் பருகிக் கடைத்தேற ஆசைப்படுகிறான். அதற்கு அவன் காவிய நயம் மீதூரத் தன் ஆசையை வெளியிடும் அழகே அழகு!

படகோட்டி கூறுகிறான் : 'உங்கள் தந்திரம் எனக்குத் தெரியும், ஐயா ! உங்கள் கால் தூசியில் கல்லை மனிதனாக்கும் மூலிகை ஒன்று இருப்பதாக எல்லோரும் கூறுகிறார்கள்! விசுவாமித்திரரோடு யாகம் காக்க நீங்கள் ஒரு முறை கானகம் வந்தபொழுது ஏதோ ஒரு கல்லில் உங்கள் கால் பட்டு அதிலிருந்து ஓர் அழகிய பெண் தோன்றினளாம். கௌதமருக்கு அகல்யை கிடைத்த கதை எங்களுக்குத் தெரியாததல்ல. கல்லைக் காட்டிலும் மரத்துக்குக் கடினத் தன்மை மிக மிகக் குறைவு. என் படகோ மரத்தினால் ஆனது. அது ஒரு ரிஷி பத்தினியாகி விட்டால், அப்புறம் என் கதி என்ன? வெள்ளத்தில் படகோட்டிப் பிழைக்கும் பிழைப்பாயிற்றே என் பிழைப்பு ! போதாக்குறைக்குப் படகோட்டும் வேலையைத் தவிர எனக்கு வேறு எந்தத் தொழிலும் தெரியாது. என் தொழிலில் மண்ணைப் போட்டு விட்டால் அப்புறம் நான் எப்படிக் குடும்பம் நடத்துவது ? அதனால், நீங்கள் கட்டாயம் கங்கையைக் கடக்கத்தான் வேண்டும் என்றால் எனது ஒரு நிபந்தனையை ஏற்க வேண்டும். அதற்குச் சம்மதமா ? உங்கள் கால்களைக் கழுவி,—கல்லைக் கனியாக்கும் மூலிகையைத் துப்புரவாகத் துடைத்துவிட்டு அதன் பின்னரே உங்களைப் படகில் ஏற விடுவேன் !'

இந்தச் சாதுரியப் பேச்சுக்கு ஸ்ரீராமர் அடிபணியும்படியாயிற்று !"

"அந்தக் கதை இப்போது எதற்காக?"

"தங்கள் பாதங்களைக் கழுவி அந்த நீரால் தங்களைப் புனிதப்படுத்திக் கொண்ட பின்னரேதான் படகை அவிழ்ப்பார்களாம் !"

"என்ன மூடநம்பிக்கை ! நானும் அவர்களைப் போல் ஒரு மனிதன்தானே? என்

காலங்களைக் கழுவி, அந்நீரை அவர்கள் பருகுவதா? நான் உடன்பட மாட்டேன்!"

மிகுந்த மன வருத்தத்தோடு கூறிய காந்தியடிகள் படகோட்டிகளை எப்படி யாவது சம்மதிக்க வைக்குமாறு வேண்டி ஞர். என்ன சொல்லியும், அவர்கள் பிடிவாத மாக மறுத்து விடவே, நேரமாகிவிட் கடிந்து கொண்டார்: "நான் என்ன ஸ்ரீ ராமரா? படகை அமிழ்க்கச் சொல் லுங்கள்!" என்று உத்தரவிட்டார்.

"எங்களுக்கு அவர் ஸ்ரீராமர்தான். எங்கள் விருப்பத்தை அவர் நிறைவேற்றினால் தான் அவர் விருப்பத்தை நாங்கள் நிறை வேற்றுவோம்!" என்று பிடிவாதமாக உட் கார்ந்து விட்டனர் படகோட்டிகள்.

ராமபக்தரான காந்தியடிகள் கடைசியில் படகோட்டிகளின் சத்தியாக்கிரகத்துக்கு அடி பணியும்படியாகி விட்டது.

ஆம், நர்மதைக் கரை கங்கைக் கரை யாகியது. காந்தியடிகள் ஸ்ரீராமரானார். படகோட்டிகள் தங்கள் விருப்பத்தை நிறை வேற்றிக் கொண்ட பின்னரே படகை அமிழ்த்தனர்!

இந்த உருக்கமான காட்சி கல்லையும் கரைய வைக்கக் கூடியதுதானே?

படகோட்டிகளின் பிடிவாதத்திலிருந்து காந்தியடிகளும் உண்மையான சத்தியாக் கிரகத்தின் உருவத்தை அடையாளம் கண்டு கொண்டார்! நர்மதை நதியும் இந்தக் காட்சியைக் கண்டு அலைக்கரங்களைத் தட்டி மகிழ்ச்சியைக் காட்டிக் கொண்டது. —ரா.வீ.

---




## விடியற்காலை தந்த அதிர்ஷ்டம்!

வாரிசு இல்லாத ஹாம்ப்ஷையர்வாசி ஒரு வர், தாம் இறப்பதற்கு முன்பாக இரு கவர் களைத் தயார் செய்தார். வக்கீலுக்கு ஒரு கவ ரும், அவர் ஈமச்சடங்குகளைச் செய்யப் பொறுப்பேற்றவரிடம் ஒரு கவரும் கொடுக் கப்பட்டன. ஈமச்சடங்குகள் எப்படி நடக்க வேண்டும் என்பதற்கு இரண்டாவது கவரில் குறிப்புகள் இருந்தன. இச் சடங்குகள் விடி யற்காலை நான்கு மணிக்கு நடந்தன. அந்தச் சடங்குகளுக்கு அப்பிரமுகரின் நான்கு நண்பர்கள் மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டு, அந்த விடியற்காலை நேரத்தில் வந்தனர். அந்த அதிகாலை நேரத்தில் சிரமப்பட்டு வந்ததற்கு என்ன வெகுமதி தெரியுமா?

விடியற்காலை நடக்கும் சடங்குகளைக் காண வரும் நபர்களுக்குச் சமமாகப் பங்கிடு செய்ய 4,00,000 டாலர்களை அவர் தம் உயிலில் எழுதி வைத்திருந்தார்!

## தீபாவளி உயில்!

அமெரிக்கர் ஒருவர் தம் உயிலில் எழுதி வைத்திருந்தார்:

"என் படுக்கை அறையில் உள்ள அலமாரி யில் மூடப்பட்ட பெட்டி ஒன்று இருக்கிறது. நான் இறந்த பின்பு அந்தப் பெட்டியை வீட்டின் பின்புறம் எடுத்துச் செல்ல வேண் டும். எரியும் நெருப்பில் வைத்து, ஒரு வக் கீலின் முன்னிலையில் நீண்ட கம்பியின் உதவி யுடன் என் பிள்ளைகள் அந்தப் பெட்டியைத் திறக்க வேண்டும்."

பெட்டியிலிருந்து என்னவெல்லாம் கிளம் புமோ என்று ஆவலோடு பிள்ளைகள், தந்தை சொன்னபடியே செய்தனர். உடனே பல விதமான பட்டாசுகள் வெடித்தன.

உயில் புஸ்வாணமாகப் போகாமல் இந்த மட்டும் வெடித்ததே என்று பிள்ளைகள் திருப்தி அடைய வேண்டியதாயிற்று!

## உயில் கட்டளைகள்

நியூயார்க்கில் பணக்காரர் ஒருவர் இறந்த பொழுது அவர் உயிலில் காணப்பட்டவை:

மனைவிக்கு: ஒரு டாலரும், நான் முட்டாள் என்று அவள் நினைத்துக் கொண்டிருப்பதை நான் அறிவேன் என்ற செய்தியும்!

மகனுக்கு: உழைத்துச் சம்பாதித்தால் சந் தோஷமாக வாழலாம் என்ற கருத்தை விட் டுச் செல்கிறேன். கடந்த 35 வருடங்களாக அந்தச் சந்தோஷம் எனக்கு மட்டுமே கிடைக் குமாறு அவன் நடந்து கொண்டு வந்தான்.

டிரைவருக்கு: எனது கார்களைக் கொடுக் கிறேன். கிட்டத்தட்ட அவற்றை அவன் கெடுத்துவிட்டான். அந்த வேலையைப் பூர்த்தி செய்த திருப்தியைப் பெறுவதற்காக அவ னுக்கே அவைகளைத் தருகிறேன்.

பாகஸ்தருக்கு: ஏதாவது வியாபாரம் செய்ய நினைத்தால் — என்னைவிடப் புத்தி சாலியான ஒரு பாகஸ்தரை அவர் தேர்ந் தெடுக்க வேண்டும் என்ற யோசனையைத் தருகிறேன்!

## உயர்ந்த மனுஷி

பிலடல்பியாவில் இருந்த மிஸஸ் ஜென் னட்டா பாட்டர்ஸன் வாலஸ் என்ற பெண் மணிக்கு வருடந்தோறும் 1800 டாலர்கள் சேரும்படியாக மிஸஸ் மெல்லியர் உயில் எழுதி வைத்தாள். ஏன்?

இருபது வருடங்களுக்கு முன்னால், இந்த இரு பெண்களும் ஒருவரையே மணந்திருக் கின்றனர். ஒருத்தியிடம் தன் பெயர், 'வாலஸ்' என்றும், இன்னொருத்தியிடம், 'மெல்லியர்' என்றும் கூறி இருவரையும் திருமணம் செய்து கொண்டிருக்கிறார் அந்த மனிதர்! பிறகு விஷயம் தெரிந்தது.

மிஸஸ் மெல்லியர் இறக்கும் பொழுது, தன் உயிலில், "எனது கணவரின் இன் னொரு மனைவிக்காக" என்று குறிப்பிட்டு, வருடாந்திர வருமானமாக 1800 டாலர்களை ஒதுக்கி வைத்தாராம்.

("மிர்ரர்" பத்திரிகையில் வெளியாகிய ஒரு கட் டுரையிலிருந்து தொகுத்தவர்: பாமா கோபாலன்)


பிரின்ஸ்
பிளேடு
இறகின்
மென்மைபோல்
முகச்சவரம்
செய்யும்
பிளேடு!
THE SYMBOL OF QUALITY
Prince
BLUE RAZOR BLADES
BLUE PRINCE BLADE
MADE IN INDIA

**சென்ற நூற்றாண்டின் இறுதி**யில், போலந்து நாட்டைச் சேர்ந்த ஒரு யுவதி, பள்ளிப் படிப்பை முடித்ததும் பல்கலைக் கழகத்தில் சேருவதற்கு விண்ணப்பித்துக் கொண்டாள். விஞ்ஞானத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்ட அவள் அதையே தன் இஷ்ட பாடமாக எடுத்துக் கொள்ள விரும்புவதாகத் தன் மனுவில் குறிப்பிட்டிருந்தாள். ஆனால் துரதிர்ஷ்டவசமாக அவளுக்கு விஞ்ஞான வகுப்பில் இடம் கிடைக்கவில்லை. பல்கலைக் கழகத்தினர் அவளுக்கு எழுதிய பதிலில், ''உங்களுக்கு விஞ்ஞான வகுப்பில் இடம் தர இயலாமைக்கு வருந்துகிறோம். சமையல் வகுப்பில் பல இடங்கள் காலியாக இருக்கின்றன. வேண்டுமானால் அதில் சேருங்களேன்'' என்று எழுதினார்கள்! அன்று அந்தக் கடிதத்தைப் பார்த்து மனம் நொந்து போன அந்தப் பெண்மணி யார், தெரியுமா? பிற்காலத்தில் ரேடியத்தைக் கண்டுபிடித்து அகில உலகப் புகழையும் இருமுறை நோபல் பரிசையும் பெற்ற ஸ்ரீமதி கியூரி!



ஆதாரம்: **மிர்ரர்**
தகவல்: **சரோஜா ராமச்சந்திரன்**

## கணக்கில் வராத காகிதம்

பாரீஸ் நகரில் உள்ள ஓர் உணவுச் சாலையில் போடுகிற முறை விநோதமானது. இங்குள்ள மேஜைகள் மீது துணி விரித்து இராது. மாறாக வெண்மையான பெரிய காகிதத்தை விரித்திருப்பார்கள். ஒருவர் சாப்பிட்டு முடிந்ததும், அவருக்குப் பரிமாறியவர் அவர் எதிரே நின்று அவர் சாப்பிட்ட உணவுப் பொருள்களின் விலைகளை மேஜை மீது விரிக்கப்பட்ட காகிதத்தில் பெரிதாக எழுதிப் பள்ளிக்கூடப் பிள்ளை போலக் கணக்குப் போட ஆரம்பித்து விடுவார். சாப்பிட்டவரிடம் பணம் வாங்கியதும், அந்தக் காகிதத்தைக் கசக்கி எறிந்து விட்டுப் புதிதாக வருபவர்க்குப் புதிய காகிதம் ஒன்றை மேஜை மீது விரிப்பார்.

- மலர்விழி





## ஜப்பானில் சேவைக்குப் பாராட்டு!

வெளிநாடுகளிலிருந்து ஜப்பானுக்கு வரும் உல்லாசப் பயணிகளை மக்கள் நல்ல முறையில் நடத்த வேண்டும் என்பதற்காக ஒரு நல்ல யுக்தியைக் கையாள்கிறது ஜப்பானிய உல்லாசப் பயணிகள் இலாகா. ஜப்பானுக்கு வரும் ஒவ்வொரு அயல்நாட்டு 'டூரிஸ்டு'க்கும் 'தாங்க்யூ' என அச்சிடப்பட்ட பத்துக் காகிதங்கள் கொடுக்கப்படுகின்றன. உல்லாசப் பயணி இவற்றைத் தமக்கு வேண்டிய உதவியைச் செய்த ஜப்பானியர் பத்து பேர்களுக்குப் பாராட்டு இதழ் என்ற முறையில் விநியோகிக்கிறார். காகிதத்தைப் பெற்ற ஜப்பானியர் அதை அரசினரின் உல்லாசப் பயணிகள் இலாக்காவுக்கு அனுப்பினால் அவரது சேவைக்குப் 'பரிசு' கிடைக்கும்!

ஆதாரம்: 'வெஸ்டர்ன் டைம்ஸ்'
தகவல்: ச. ஸ்ரீதரன்

இப்பொழுதெல்லாம் பத்திரிகைகளுக்கு உள்நாடு வெளிநாடு என்று இரண்டு வகைச் சந்தாதானே உண்டு! அந்த நாளில், அதாவது அறுபது ஆண்டுகளுக்கு முன்னால் பாரதியார் நடத்திய 'இந்தியா' என்னும் பத்திரிகைக்கு ஆண்டு சந்தா கீழ்க்கண்டவாறு இருந்தது!



எல்லா கவர்ன்மெண்டாருக்கும் ரூ. 50.00
ஜமீந்தார், ராஜாக்கள் முதலியோருக்கு ரூ. 30.00
மாதம் இருநூறு ரூபாய்க்கு மேற்பட்ட வருமானம் உடையவர்களுக்கு ரூ. 15.00
மற்றவர்களுக்கு ரூ. 3.00

ஆதாரம்: **'தினத் தந்தி' வெள்ளி விழா மலர்**
தகவல்: **சுந்தா ராமச்சந்திரன்**

# பூட்டை இயக்க ஒரே இணைப்பு!




நவ-தால் பூட்டும் அதன் சாவியும். ஒவ்வொரு நவ-தால் பூட்டும் தனித் தன்மையுடையது. அதற்கென்றே தனியான லீவர் இணைப்பு, தனியான சாவி. ஒன்றைப் போல் அல்ல மற்றது! இதனால் தான் நவ-தால் முற்றிலும் நம்பத்தக்கது. மறு சாவியி னால் திறக்க முடியாதது. உடைக்க முடியாதது.

உறுதியான அமைப்புள்ள நவ-தால் இரட்டைக் கூடு கொண்டது; வெளிப்புறம் ரிவெட் இல்லாத பித்தளை, உட்புறம் எஃகு. நுட்பவேலைப் பாடுடைய பருமனான பித்தளை லீவர்கள், வலிமை யான அமைப்பு. தவிர, காட்மியம் பூச்சு செய்த அதிக உறுதியான எஃகு தளை (ஷாக்கிள்) அதிக பட்சம் பாதுகாப்பை அளிக்கிறது.

தயாரிப்பவர்கள் கோத்ரெஜ்- 70 ஆண்டுகளுக்கும் மேலாக பாதுகாப்பு உப - கரணங்களைத் தயாரிப்பதில் பெயர் பெற்றவர்கள்.

## நவ-தால்

3 சைஸ்கள்;
50 mm (6 லீவர்கள்)
67 mm (7 லீவர்கள்)
85 mm (8 லீவர்கள்)

Godrej கோத்ரெஜ் எப்போதும் கேட்டு வாங்குங்கள் நங்கூரம்

# கருமமே கட்டளைக்கல்

பூரம்

மழைக்கால நிலவானதால் வெளிச்சம் அவ்வளவு இல்லை. எனக்கெதிரில் சிமெண்ட் பெஞ்சியில் உட்கார்ந்திருந்த அருணாசலத்தின் முக பாவங்களை நான் சரியாகக் கவனிக்க முடியவில்லை. யார் யாரையோ கேட்க வேண்டிய கேள்விகளையெல்லாம் என்னிடம் கேட்டுக் கொண்டு ஒவ்வொரு கேள்விக்கும் இடையில் வெகு நேரம் அசையாமல் மௌனமாக இருந்து என் பொறுமையைச் சோதனை செய்து கொண்டிருந்தார். நடுவில் நான் சொல்கிற எந்தப் பதிலையும் காதில் வாங்கிக் கொள்ள மாட்டார். உணர்ச்சிகளில் அவருடைய லயிப்பு அவ்வளவு! அவரிடமிருந்து கழன்று கொள்ளவும் முடியாது. அந்தக் குரங்குப் பிடியில் நான் தவித்துக் கொண்டிருந்தேன்... நடுநடுவில் நீண்ட பெருமூச்சு விட்டு, 'ஹூம்...' என்று இழுப்பேன்.

''கேளுங்கோ ஸார். நியாயத்தை. என் சம்பளத்தைக் கணக்குக் கேட்க இவன்னாம் யாரு? நீ பால் வித்துக் காசு சேக்கறியே, அதை நான் கேட்டிருக்கேனா? பைசாக்காக?...''

''சரி...''

''கேளுங்கோ. எனக்கு நிம்மதியாச் சோறு போட்டிருக்கியா? ஒரு நாள்?... கிடையாது ஸார்னு...''

''தினம், தினம் ஏன் இப்படி?''

''தினம் தினம் ஸார். கத்தல், இரைச்சல், சத்தம்? பாருங்கோ, என் மானம் போறது. ஊரே சிரிக்கிறது... என் பொண்ணு என்னை என்ன கேள்வி கேட்கறது தெரியுமா? எல்லாம் இவன் இருக்காளே, இவ 'ட்ரெயினிங்'. எல்லாம் நமக்குச் சத்துரு...''

அருணாசலத்துக்கு மூன்று பெண்கள்; மூன்று பையன்கள். மூத்தவன் ஏதோ ஒரு கம்பெனியில் வேலை பார்க்கிறான். வயது இருபது. அப்புறம் பெண். வயது பதினெட்டு. அடுத்தவன் பாலு. எஸ். எஸ். எல். ஸி. படிக்கிறான். மற்ற மூன்றும் சிறிசுகள்.

''... ஒரு சினிமா விடாமெ நீ போக வேண்டியிருக்கு. போறபோது ஒரு வார்த்தையாவது சொல்றியா, கிடையாது. எங்கேயோ போறே, எங்கிருந்தோ வர்றே... கேள்வி கேட்பாடு கிடையாது. உன்னை நான் பெண்டாட்டியா எதுக்கு மதிக்கணும்?''

''உம்!...''

''அன்னியிலேருந்து இன்னி வரைக்கும் இவ அப்படித்தான்! நல்ல ஜாதி இல்லே. இவளைக் கல்யாணம் பண்ணின்டதே தனிக் கதை. எங்கப்பா அந்தக் காலத்திலே தாசில்தாரா உத்தியோகம் பண்ணிண்டிருந்தார். அவருக்கு ஒரு சமயம் கோர்ட் கேஸ் ஒண்ணு வந்துடுத்து. எக்கச்சக்கமா மாட்டிண்டுட்டார். இரண்டாயிரம் ரூபாய் பணம் தேவைப்

பட்டது. பட்டணத்துக்கு வந்தார். இவ அப்பா அந்தச் சமயத்திலே இவளுக்கு வரன் தேடிண்டிருந்தார். இந்தக் கரிக் கட்டைக்கு வரன் லேசிலே கிடைக்குமா?... எங்கப்பா இவரைப் பார்த்து நிலைமையைச் சொல்லியிருக்கார். அவர் உடனே, 'பணம் தானே ஸ்வாமி வேணும்? பணம் இரண்டாயிரம் இப்பவே தரேன்... ஒரே ஒரு கண்டிஷன்...' அப்படீன்னார். எங்கப்பா எல்லாத்துக்கும் தயாரா யிருந்தார். பணம்னு தேவைப்படறது? 'என்ன கண்டிஷன் வேணும்னாலும் சொல்லுங்கோ. பணத்தைக் கொடுங்கோ முதல்லேன்னார் எங்கப்பா. ''உம் பையனுக்கு என் பொண்ணைக் கல்யாணம் பண்ணிக்கிறதா யிருந்தால் பணத்தை இப்பவே தரேன்னார். எங்கப்பாவும் சரின்னுட்டார்.''

''சரிதான்'' என்றேன் நான்.

''கேளுங்கோ... அவர் உடனே பணத்தைக் கொடுத்துவிட்டு அந்தப்படியே எழுதி வாங்கினுட்டார். ''

''ஓகோ!''

''எந்தப்படி?... 'நான் என் பிள்ளைக்கு உமது பெண்ணைக் கல்யாணம் பண்ணிக் கொள்வேனாகவும்' அப்படீன்னு...''

''வேடிக்கையா இருக்கே!''

''எங்கப்பா வந்து எங்கிட்டே சொன்னார்.''

''நீங்க இஷ்டமில்லேன்னுட்டேளாக்கும்?''

''ஆமா. சொல்லிப் பார்த்தேன். இரண்டாயிரம் ரூபாய் செலவழிஞ்சு போச்சு. எங்கப்பா எங்கிட்டச் சொல்லிக் கண்ணாலே ஜலம் விட்டார். 'வாக்குக் குடுத்துட்டேண்டா, காப்பாத்துடா'ன்னார். யாரைக் கேட்டுண்டு வாக்குக் கொடுத்தே நீ?''

''அதானே!''

''என்னவோ என் நிலைமை அப்படீடான்னு கதறினார். அப்பவும் முடியாதுன்னேன். அப்புறம் கடைசியா, 'இவளை நீ கல்யாணம் பண்ணிக்கலேன்னா, நான் தூக்குப் போட்டுக்குவேன்'னார்....அப்புறம் சரின்னுட்டேன். அந்த வயத்தெரிச்சலை ஏன் கேக்கறேள் போங்கோ....''

ஏன், என்று எனக்குப் புரியத்தான் இல்லை.

''அப்புறம் சரி, தலையெழுத்துன்னு கல்யாணம் பண்ணிண்டேன். வேறே வழி இல்லை. அவள் வந்ததிலேர்ந்து எனக்குக் கஷ்டந்தான் போங்கோ...''

''நீங்க கொஞ்சம் கண்டிப்பா இருக்கப் படாதோ?'' என்று ஏதோ சொல்லி வைத்தேன்.

''கண்டிப்பாவது, எழவாவது? நன்னாயிருக்கு. அந்த வம்சம் அப்படி ஸார்...? மகா வாயாடிப் பிணங்கள். நான் வாயே கொடுக்கிறதில்லே. ரொம்ப வயத்தெரிச்சலா இருக்கு பாருங்கோ...''

''என்னமோ, ரொம்பக் கஷ்டம்...''

''மூத்தவ அகல்யா... அவ எங்கே போறா, வரா, என்ன சம்பாதிக்கிறா... ஏதாவது நான் காதிலே போட்டுண்டது உண்டா? கிடையாது. எப்படியோ போறதுகள். நம்மை மதிக்காதபோது நமக்கென்ன கேடு? பின்னே என்ன ஸார், தினம் போது விடிஞ்சா, போது போனா சண்டைன்னுக்க?... எத்தனை பணம் கொடுங்கோ திருப்திங்கறது கிடையாது....''

''பணம் போற மாட்டேங்கறது பாவம்.''

''எப்படி ஸார் போறும்? டிரஸ் பண்ணிக்க வேண்டியிருக்கு. சினிமா நாடகம் போகாமெ உள்ளுலே இருக்க முடியாது. பொண்ணுக்கு நைலக்ஸ் இல்லேன்னா உத்தியோகம் பார்க்க முடியாது. பவுடர், ஸ்நோ, எல்லாம் மாசா மாசம் வாங்கற சரக்கு.... போறுமா? ஆபீஸ் உத்தியோகம் போறவன்னு என்ன என்ன எழவெல்லாமோ வாங்கியாக வேண்டியிருக்கே.... டிரஸ் பண்ணிக்காமெ வாசப்படி விட்டு இறங்கலாமோ?...''

''ம்...''

''நானூறு ரூபாய் கொடுத்து ரிஸ்ட் வாட்ச் வாங்க வேண்டியிருக்கே... இதெல்லாம் அவசியச் செலவாச்சே! என்ன?...''

''அகல்யாவுக்கு என்ன சம்பளம் வரது?''

''யாருக்கு ஸார் தெரியும்? நூறுங்கறா, இருநூறுங்கறா.... எல்லாம் பொய். பெத்த தகப்பன் கிட்ட உண்மை கிடையாதுன்னா, இது என்ன குடும்பம்?''

நான் பேசவில்லை. இரவு மணி பத்தாகி விட்டது. பனி இலேசாகப் பெய்ததில் உடம்பு ஜில்லிட்டது. தூக்கம் அமட்டிற்று. அருணாசலம் விடுகிற வழியாக இல்லை. எப்படி விடுபடுவது என்று விழித்துக் கொண்டிருந்தேன்.

உள்ளேயிருந்து என் மனைவி வஸந்தி ஜாடையாக அழைத்த சாக்கில், நான் தோட்டத்துப் பெஞ்சியை விட்டுச் சற்று எழுந்தேன். ''ஸாருக்குத் தூக்கம் வந்துட்டாப்பலே இருக்கு...''

' ஊக்கும்...''

''சரி, நான் வரேன்... என்னவோ என் லைஃப் இப்படி ஆயிடுத்து....''

''ஒண்ணும் மனசைத் தளர விடாதீங்கோ. ஸ்வாமியை வேண்டிக்கோங்கோ'' என்றேன்.

''எல்லாம் பாக்கியே கிடையாது. எல்லாம் பார்த்தாச்சு...'' என்று சொல்லிவிட்டுத் துண்டை உதறிக் கொண்டே அவர் கிளம்பினார்.

நான் உள்ளே வந்து கதவைத் தாழ்ப்பாள் போட்டேன்.

''அப்...பா! நீங்க ரொம்பப் பொறுமைசாலிதான்!'' என்று வஸந்தி சிரித்தாள், உள்ளே வந்ததும்.

''எனக்குத் தூக்கம் வந்து ரொம்ப நாழியாயிடுத்து.''

''ஏதாவது சாக்குச் சொல்லி அனுப்பறதுக்கு என்ன? நல்ல மனுஷர்!.... அந்த மாமி நேத்திக்கு ஒரு கதை சொல்லி அழுதா, எங்கிட்டே....''

''யாரு?''

''இவர் அகத்துக்காரிதான்!''

''யாரு, அந்தச் சண்டை போடறவளா?''

''ஊக்கும்...''

''ஆமாம். இவர் சொல்ற கதைக்கும் அதுக்கும் ஏகப்பட்ட வித்தியாசம் இருக்கு. அந்த மாமி என்ன சொல்கிறார் தெரியுமோல்லியோ? இவர் சம்பளத்தைக் கொண்டுவந்தே தர்றது இல்லையாம்.''

''பின்னே?''

''முதல் தேதியன்னிக்குப் பைசாகூட இல்லாம வருவாராம் ஆபீஸ்லேந்து...''

''ஏன்?''

''சீட்டாட்டத்திலே பைத்தியம் பிடிச்சு ஆயிரக்கணக்கிலே தோத்துப்பிடுவாராமே!''

''இவர் சீட்டாடுவாரா?''

''மகா பைத்தியமாம். முக்கால் வாசி நேரம் சீட்டாட்டந்தானும்...''

எனக்கு அதிர்ச்சியாக இருந்தது. சற்று முன் எவ்வளவு வக்கணையாகப் பேசினார் மனிதர்! சீட்டாடுவதை மறைத்துவிட்டுப் பேசி, நல்லதனம் சம்பாதிக்கிறார், பொல்லாத மனிதர்!

நான் இந்த ஊருக்கு மாற்றலாகி வந்து நான்கு நாட்களுக்கெல்லாம் தற்செயலாக என் நண்பர் ஒருவர் மூலம் இந்த வீட்டை வாடகைக்குப் பிடித்தேன். அதனால் உடனேயே வஸந்தியை அழைத்து வந்து குடித்தனம் போட முடிந்தது. எங்கள் வீட்டுக்கு எதிர் வீட்டில்தான் அருணாசலம் குடியிருக்கிறார். ஒரு நாள் ஆபீஸிலிருந்து வந்து வீட்டுக்குள் நுழையும்போது எதிர் வீட்டிலிருந்து அருணாசலம் வலுவில் வந்து விசாரித்தார். கேட்ட கேள்விகளுக்கெல்லாம் 'ஆமாம், ஆமாம்' என்று ஒரு வார்த்தை பதில்களாக நான் சொன்னபோது கூட அவர் விடுகிற வழியாக இல்லை. அன்று முதல் வாசலில் நான் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தால் போதும், பேச வந்துவிடுவார். அவர் வீட்டுச் சமாசாரம் பேச ஆரம்பித்தால் ஓய்வே கிடையாது. ஒவ்வொரு சமயம் எதிர்த்த வீட்டில் கூச்சல், இரைச்சல் அமர்க்களப்படும். தெரு முழுதும் கேட்கும்படி, நாராசமாக இருக்கும். சகிக்க முடியாது. பணம் போதாத கஷ்டம்தான்; தேவைக்குப் பணம் கிடைத்து விட்டால், இந்தச் சண்டை பூசல் எல்லாம் ஏன் வரப் போகிறது என்று எனக்குத் தோன்றும்.

ஆனால் அருணாசலம் இலேசுப்பட்டவர் இல்லையென்று விசாரித்துப் பார்த்தபிறகல்லவா தெரிகிறது? இரண்டு மூன்று தடவைகள் அவர் வந்து ரொம்ப அவசரம் என்று கடனாகப் பணம் வாங்கிப் போயிருக்கிறார். ஒரு தடவை திருப்பிக் கொடுத்திருக்கிறார். அப்புறம் வாங்கினதெல்லாம் இதுவரையில் தரவில்லை. போனால் போகிறார், குழந்தை குட்டிக்காரர், கஷ்டப்படுகிறார் என்று இரக்கமாக இருந்தது. ஆனால் இப்பொழுதல்லவா தெரிகிறது, குடும்பத்தைத் தவிக்க விட்டு விட்டுச் சீட்டாட்டம் ஆடுகிற அயோக்கியர் என்று?

''அந்தக் குழந்தைகளை யெல்லாம் பார்த்தால் பாவமாக இருக்கிறது. எல்லாம் ரொம்ப சமர்த்து...'' என்றாள் வஸந்தி ஒரு நாள்.

''அந்த அம்மாவுந்தான் என்ன செய்வாள்? பாவம், கஷ்டப்பட்டுத்தான் குடித்தனம் பண்ணுகிறாள்'' என்றேன்.

''கஷ்டம் ஒன்றுமில்லை. அவளும் அகல் யாவும் செலவு பண்றதைப் பார்த்தா யாரும் கஷ்டப்படறதாச் சொல்ல மாட்டா. வாரந் தவறாமல் டிரஸ் பண்ணிண்டு என்ன சினிமா, நாடகம் வேண்டிக் கிடக்கு? குழந்தைகளைத் தூங்கப் பண்ணிட்டு ராத்திரி சினிமாவுக்குக் கிளம்பணுமா என்ன?...''



''ஏன் இப்படி குழந்தையைப் போட்டு அடிக்க கொல்றீங்க!''

''நாளைலேருந்து ஒரு வாரத்துக்கு ஊரிலே இருக்கமாட்டேனே. நாளன்னைக்குத்தானே பிராக்ரஸ் ரிப்போர்ட் கொடுக்கறாங்களாம். அதுக்குதான் அடிக்கட்டேன். நீ அதிலே கையெழுத்து போட்டு அனுப்பிடு.''

ஒரு வாரம் வரை அருணாசலத்தைக் காணவில்லை. ஒரு நாள் அருணாசலத்தின் மனைவி அவசர அவசரமாக வஸந்தியிடம் வந்து ஏதோ பரபரப்போடு சேதி சொல்லிக் கொண்டிருந்தாள். கொஞ்ச நேரத்துக்கெல்லாம் வஸந்தி என்னிடம் வந்தாள்.

''கொஞ்சம் வாங்கோ... அந்த மாமி வந்திருக்கார். அவா வீட்டு மாட்டுக்குத் திடீர்னு ஏதோ வலிப்பு வந்து விழுந்து வெட்டி வெட்டி இழுக்கிறதாம். பயங்கரமா இருக்காம்...''

''என்னது? எருமை மாட்டுக்கா?''

''ஆமாம்... திடீர்னு தொபடிச்சிண்டு விழுந்துடுத்து. அப்படியே வாயெல்லாம் நுரை தள்ளிடுத்து....பயமா இருக்கு! என்ன செய்யலாம்னே புரியல்லே...''

''சரி, மாமா இல்லையோ?''

''அவர் ஒரு வாரமா வீட்டுக்கே வரலியே.''

''ஏன்?''

''அது சுபாவம் அப்படித்தான்.... நீங்க வந்து ஏதாவது ஏற்பாடு பண்ணணும்...''

''சரி, வெடர்னரி டாக்டருக்கு போன் பண்ணறேன். பயப்படாதீங்கோ.''

''என்னமோ, நான் இந்தப் பால் வியாபாரம் பண்ணி இந்தக் குடும்பத்தை ஓட்ட வேண்டியிருக்கு. இவர் கொஞ்சம் கூட வீட்டைக் கவனிக்கிறது கிடையாது. சொல்ல முடியாத கஷ்டம். ஊரெல்லாம் கடன் வாங்கி யிருக்கார். என்ன பண்ணுவேன். சொல்லுங்கோ...'' — மாமி கண்களில் ஜலம் ததும்பிற்று.

நான் உடனே எழுந்து சென்று போன் பண்ணி விட்டு வந்தேன். மாட்டு டாக்டர் வந்து பார்த்துவிட்டு என்ன என்னவோ வைத்தியம் பார்த்து விட்டுப் போனார். எல்லாம் என் கைச் செலவுதான்.

''நான் திருப்பித் தந்துடறேன். இந்தச் செலவை, அகல்யா சம்பளம் வாங்கின உடனே... வஸந்தி, உங்க அகத்துக்காரர் நல்லவேளையா சமயத்திலே கைகொடுத்தார்'' என்று நன்றி தெரிவித்துவிட்டுப் போனாள் மாமி. அப்புறம் இரண்டு மூன்று நாட்களுக்குத் தினமும் எருமையின் நிலைமையைப் பற்றித் தகவல் சொல்லி விட்டுப் போய்க் கொண்டிருந்தாள்.

''எங்க குடும்பத்துக்கே நீங்க உயிர் தந்த மாதிரி. நான் இந்த உதவியை ஜன்மா யுஸுக்கும் மறக்க மாட்டேன்'' என்று பத்துத் தடவை சொல்லி விட்டாள்.

''நன்றாக இருக்கிறது! சமயத்திலே இதெல்லாம் செய்யலேன்னா அப்புறம் என்ன இருக்கு தன்மை?'' என்று பூசி மெழுகினேன்.

ஆனால் ஒரு வாரம் கழித்து அருணாசலத்தைப் பார்க்கும்போது, நானும் சரி, அவரும் சரி, இந்த விஷயத்தைப் பற்றிய பேச்சை எடுக்கவே யில்லை. ஏதோ லோகாபிராமமாகப் பேசிவிட்டுப் போய்விட்டார். அதற்கப்புறம் எத்தனையோ முதல் தேதிகள் வந்து அகல்யாவும் சம்பளம் எத்தனையோ தடவை வாங்கியாகி விட்டது! பணம்தான் திரும்பி எனக்கு வரவில்லை.

அந்த வருஷம் அருணாசலத்தின் பையன் பானு எஸ். எஸ். எல். ஸி. பாஸ் பண்ணி விட்டான். அருணாசலம், பையனை அழைத்துக்கொண்டு வந்தார் ஒரு நாள்.

''மாமாவை நமஸ்காரம் பண்ணுடா...''

''எதுக்கு? எதுக்கு ஸார்?'' என்றேன்.

''பயல் பாஸ் பண்ணிவிட்டான். டைப்ரைட்டிங் ஒரு மாசமாக் கத்துக்கறான். குடும்பத்திலே ரொம்பக் கஷ்டமா இருக்கிறதினாலே நீங்க ஒரு இடத்திலே வேலை பண்ணி வையுங்கோ...''

''பேஷ் பேஷ்!... நல்ல மார்க் வாங்கியிருக்கானா?''

பானு சொன்னான்: எல்லாம் எழுபதுக்கு மேலே!... ஆச்சரியமாக இருந்தது.

''தேவலையே! கெட்டிக்காரன்தான். ஆகட்டும். பார்க்கிறேன். டைப்ரைட்டிங் பாஸ் பண்ணி விட்டால் அப்புறம் கொஞ்சம் சுலபமாக வேலை கிடைக்கும். பார்க்கலாம்.''

''ஏதோ பாருங்கோ! நீங்க நல்ல உத்தியோகத்திலே இருக்கிறதனாலே, உங்க சிபாரிசுக்கு மதிப்பு உண்டு!''

''ஆமா, காலம் பொல்லாத காலமா இருக்கிறதே! ஏதோ பார்க்கிறேன்...'' என்று சொல்லி யனுப்பினேன்.

யாருடைய அதிர்ஷ்டமோ தெரியாது. எனக்குத் தெரிந்த நண்பர் மூலமாக ஒரு கம்பெனியில் பானுவுக்கு ஒரு மாதத்துக்கெல்லாம் வேலை கிடைத்து விட்டது. அருணாசலத்துக்குப் பரம திருப்தி.

மாமியும் வந்து குடும்பம் படுகிற கஷ்டத்தை யெல்லாம் சொல்லி அழுதுவிட்டு இந்த உதவிக்கு நன்றி சொல்லி விட்டுப் போனாள்.

மனத்துக்குள் அருணாசலம் சிறுகச் சிறுக என்னிடம் வாங்கிக் கொண்ட தொகைகள் நினைவுக்கு வந்தன. மொத்தம் நான் இது வரை கூட்டிப் பார்த்ததில்லை. வஸந்திக்குத் தெரிந்தால் அப்புறம் தூங்கவே மாட்டாள்! கிட்டத்தட்ட ஐந்நூறு ரூபாய்க்கு வந்திருக்கும். நேற்றுக்கூட வந்து ரகசியமாக வாங்கிக்கொண்டு போனார்.

''நமக்குள்ளேயே இருக்கட்டும். எப்படியும் நான் திருப்பித் தந்துவிடுவேன். நான் ஏமாற்ற மாட்டேன்: எல்லாம் கணக்கு வைத்துக் கொண்டிருக்கிறேன். இதுவரை ஃபோர் செவண்டி ஸிக்ஸ் ஆகியிருக்கு...''

''அது சரி... இருக்கட்டும்.''

''இப்ப ஒரு டென் ருபீஸ் அர்ஜண்டா வேண்டியிருக்கு...''

'இல்லை' என்று சொல்வதற்குத் தயக்கமாக இருந்தது. கொடுத்தேன். ஆனால் இதெல்லாம் திரும்பி வரும் என்கிற நம்பிக்கை எனக்கு லவலேசமும் இல்லை. போகட்டும் குடும்பம் ஒன்று கரையேறுவதற்கு உதவிய புண்ணியமாவது மிஞ்சட்டும், என்று தோன்றிற்று. பானு தலையெடுத்தால், மற்ற குழந்தைகள் சற்று நிம்மதியாக முன்னுக்கு வரலாம் என்ற நம்பிக்கை இருந்தது.

பத்துப் பதினைந்து நாட்களுக்குப் பிறகு மாமி ஒரு நாள் வந்தாள்.

''உங்களைத்தான் அடிக்கடி சிரமப்படுத்த வேண்டியிருக்கு... உங்களால் முடிஞ்சு செஞ்சால் தேவலாம்...'' என்று தயங்கினாள்.

''சொல்லுங்கோ, முடிந்தால் பார்க்கிறேன்...''

''அகல்யாவைத் திடீர்னு சேலத்துக்கு மாற்றியிருக்காளாம். கம்பெனிக்கு பிராஞ்ச் ஒண்ணு இருக்காமே அங்கே...?''

''அட கஷ்டமே!''

''அந்தக் கம்பெனியிலே யாராவது தெரிஞ்சவா இருந்தால் கொஞ்சம் சொல்லி அதைக் 'கான்ஸல்' பண்ண முடியாதா?''

''எனக்கு அந்தக் கம்பெனி மானேஜரை அவ்வளவு தெரியாது. முடிந்தவரையில் பார்க்கிறேன்....'' என்றேன்.

என் நண்பருக்கு நண்பர் ஒருவர் மூலமாக இந்த விஷயத்தை முனைந்து பார்த்தேன்: 'குடும்பச் சந்தர்ப்பங்கள் சரியாக இல்லை' என்று ஏதேதோ காரணங்கள் சொல்லி இந்த மாற்றலை மாற்றுவதற்குள் போதும், போதுமென்றாகி விட்டது.

அகல்யாவை நடுவில் ஆபீஸ் போகும் போதும் வரும்போதும் எத்தனையோ தடவைகள் நான் பார்த்ததுண்டு. ஆனால் அவள் இது பற்றிப் பேசவும் இல்லை, 'மாற்றலை' மாற்றி விட்டதற்கு நன்றி தெரிவிக்கவும் இல்லை. ஒன்றுமே நடக்காதது போல் அவள் பாட்டுக்குப் போய்க் கொண்டிருந்தது தான் ஆச்சரியமாக இருந்தது.

**ப**தினைந்து நாட்களுக்குப் பிறகு நான் ஆபீஸிலிருந்து வந்ததும் வராததுமாய் வஸந்தி சிரித்துக் கொண்டே சொன்னாள்.

''இன்னிக்கு ஒரு வேடிக்கை. எதிர்த்த வீட்டிலே மாமியோட எருமை மாட்டை யாரோ ஒருத்தன் வந்து இழுத்துண்டு போயிட்டான்.''

# பாரதி கலா மன்றம்

(Regd.)

மாதுங்கா - பம்பாய்-19

கட்டிட நிதிக்காக நாடக விழா –
யூனிட்டி கிளப், சென்னை-5 அளிக்கும்
மூன்று நாடகங்கள்

**21-2-1969 இரவு 8 மணிக்கு**

திரைப்படப் புகழ் மனோரமா, கோபால கிருஷ்ணன். "வெண்ணிற ஆடை" மூர்த்தி ரேணுகா நடிக்கும்

## "மாயா பஜார்"

நகைச்சுவை நாடகம்

By கோபு & அனந்த்

**22-2-1969 இரவு 8 மணிக்கு**

திரைப்படப் புகழ் முத்துராமன், கோபால கிருஷ்ணன். "வெண்ணிற ஆடை" மூர்த்தி மணிமாலா, ரேணுகா நடிக்கும்

## "ஸ்ரீமதி"

By கோபு & அனந்த்

**23-2-1969 மாலை 7 மணிக்கு**

திரைப்படப் புகழ் மனோரமா, கோபால கிருஷ்ணன். "வெண்ணிற ஆடை" மூர்த்தி ரேணுகா நடிக்கும்

## "காரணம் கேட்டு வாடி"

நகைச்சுவை நாடகம்

By கோபு & அனந்த்

நாடகங்கள் தயாரிப்பு: V. கோபால கிருஷ்ணன்
இசை: C. நாகம் டேனியல்

**இடம்:**

## ஷண்முகானந்தா ஹால்

**சயான், பம்பாய்-22**

**சீசன் டிக்கட்டுகள்:**

அரங்கின் அடிதளம்: ரூ. 30, 20, 15, 10 & 8
முதல் பால்கனி..........ரூ. 6
இரண்டாவது பால்கனி: ரூ. 4.50

**டிக்கட்டுகள் கிடைக்கும் இடம்:**

1. ஸ்ரீ வெங்கடேஸ்வரா ஸ்டோர்ஸ்
   மாதுங்கா போஸ்டாபீஸ் அருகில், மாதுங்கா
2. அம்பிகா க்ளாத் ஸ்டோர்ஸ்
   செமஹால், சயான் ஆஸ்பத்திரி எதிரில், சயான்

*WHEREVER YOU ARE, WE ARE THERE!*

In the busy city, in the sleepy village, on road
at sea — wherever you are, we are there!

# NEW INDIA

INDIA'S LARGEST GENERAL INSURANCE COMPANY

Offers you unexcelled service in

**FIRE * MARINE * ACCIDENT**

and various other types of General Insurance

OUR POLICY IS PROTECTION



## THE NEW INDIA ASSURANCE
### COMPANY LIMITED

NEW INDIA ASSURANCE BUILDING

MAHATMA GANDHI ROAD - FORT, BOMBAY-1

---

# ஆல்போ-ஸாங்



## எல்லா வயதினருக்கும் ஒரு சிறந்த டானிக்

உங்களுடைய உடல் வளர்ச்சிக்கு ஆல்போ-ஸாங் அவசியம் தேவை. ஏனெனில் [illegible] எல்லோருடைய ஆரோக்கியத்திற்கும் உடல் வளர்ச்சிக்கும் தேவையான விசேஷப் பொருள்கள் ஆல்போ-ஸாங்கில் இருக்கின்றன.




ஜே. அன் ஜே. டீஷேன்

ஹைதராபாத் (டெக்கான்)

''யாரு?''

''பட்டாணியன் மாதிரி இருந்தான். ஒரு போலீஸ்காரனை அழைத்துக் கொண்டு வந்தான். கடன் வாங்கினது திருப்பித் தரலையாம்!''

''யாரு கடன் வாங்கினது?''

''அவர் வாங்கியிருக்காராம் கடன் ஆயிரம் ரூபாய் அவன்கிட்டே. கோர்ட் உத்தரவோட வந்து எருமையை இழுத்துண்டு போயிட்டான்...''

''அட கஷ்டமே!''

''பாவம், எங்கே பால் வியாபாரம் இனிமேல்?''

எனக்கு மனசுக்குக் கஷ்டமாக இருந்தது. மாமியின் நிலைமைதான் எப்படி ஆகிவிட்டது? இந்த மனிதர் கடன் வாங்கப் போக அதன் விளைவு இப்படியும் ஆகுமா?... பாலுவுக்கு இப்பொழுதுதான் வேலை ஆகிவிட்டது என்றாலும் இப்படி ஒரு படி ஏறுவதற்குள் இரண்டு படி சறுக்கி விட்டதே!

ஆச்சரியப்படும் வகையில் மாமியோ, அருணாசலமோ அப்புறம் கண்ணில் தட்டுப்படவில்லை. எதிர்த்த வீட்டில் ஒரே சண்டையும் பூசலும் கூச்சலுமாக இருந்தது. ஒரு வாரத்துக்குப் பிறகு அருணாசலம் நேருக்கு நேர் என்னைத் தெருவில் பார்த்தும்கூட, ''நான் அப்புறம் சாவகாசமாகப் பார்க்கிறேன். நீங்க 'பிஸி'யாக இருக்கேள்...'' என்று சொல்லி விட்டு நழுவினார்.

ஒரு நாள் இரவில் சாப்பிட்டு விட்டு உட்கார்ந்திருந்தபோது வஸந்தி சொன்னாள்:

''அந்த மாமிக்கு இன்னொரு கஷ்டம் கேட்டீர்களா?''

''என்னது?''

''பாலுவுக்கு வேலை போயிடும் போல இருக்காம்.''

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது.

''என்னடீது?''

''பாலு ஆபீஸ் பணத்தை எடுத்துச் செலவழிச்சுப்பிட்டானுமே!''

''ஐயையோ!''

''ஆமாம். ஆபீஸிலே பணம் ஆயிரம் ரூபாய் குறைஞ்சிருந்ததாம்... விசாரித்ததிலே, எடுத்ததை ஒப்புக் கொண்டானும்.''

''அட பாவி! பாலுவா? நம்பவே முடியல்லியே! உனக்கு யார் சொன்னா?''

''அந்த மாமியேதான் இன்னிக்கு மத்தியானம் வந்து சொல்லி அழுதாள்.''

''பாலு அப்படியெல்லாம் இருக்க மாட்டான்னு நெனைச்சேன்...''

''கேளுங்கோ. பாலு எடுத்துச் செலவழிக்கல்லே. அருணாசலம் இருக்காரே... இவர் அடிக்கடி பாலு ஆபீஸுக்குப் போவாராம். அவனைப் பணம் கேட்டுத் தொந்தரவு பண்ணியிருக்கார்....ஆபீஸ் பணத்தை எடுத்துக் கொடுத்துவிட்டான்...''

''அட அசடே! அப்பா கேட்டார்னு, பிறத்தியார் பணத்தை எடுத்துக் கொடுத்துடறதா என்ன?''

''போலீஸ் கேஸாகி, ரிமாண்ட்லே வைச்சிருக்கானாம். பணத்தைக் கட்டினால்தான் விடுவானாம்... மாமி பணத்துக்கு எங்கே போவா? எருமை மாடும் போயிடுத்து.''



''உயிருள்ள மீனை விழுங்கிக் காட்டுகிறேன். உயிரோடு பாம்பை விழுங்கிக் காட்டுகிறேன். ஐயா! இந்த ஏழைக்கு உதவுங்கள்.''

''இந்தா ஜீரண மாத்திரை.''

எனக்கு அந்த அதிர்வைத் தாங்க முடியவில்லை. அருணாசலத்தை என்ன செய்தால் என்ன? வயசு ஆயிடுத்து கிடா மாட்டுக்கு ஆகிற மாதிரி. குடும்பத்தை நிமிர விடமாட்டார் போலிருக்கிறதே!...''

''ரொம்பப் பரிதாபம்தான்'' என்றேன்.

''அந்தக் குடும்பம் எங்கே நிமிர்வது? நாம் இனிமே அவர்களுக்கு எதுவும் செய்யப்படாது...'' என்றாள் வஸந்தி.

நான் பதில் பேசவில்லை.

பத்து நாட்கள் வரை நானும் வஸந்தியும் இது பற்றியே பேசச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. எதிர்த்த வீட்டில் ஒரு சத்தமும் கேட்கவில்லை. அருணாசலம் பதினைந்து நாட்களாக வீட்டுக்கே வரவில்லை என்றுமட்டும் தெரிந்தது.

அகல்யாவையும் காண முடியவில்லை. நினைத்தால் ஒரே சோக மயமாகத்தான் இருந்தது. இனிமேல் நாம் என்ன அதில் செய்ய இருக்கிறது என்று நான் வெறுத்துப் போய் விட்டேன்.

அன்று ஆபீஸிலிருந்து வந்து உள்ளே நுழையும்போது வஸந்தி, ''உங்களுக்கு ஒரு சமாசாரம் வைத்திருக்கிறேன். முதலில் காப்பி சாப்பிடுங்கள். அப்புறம் சொல்கிறேன்'' என்று மர்மப் புன்னகை செய்தாள். குழந்தைத்தனமாக இருந்தது அது!

''நான்கூட ஒரு சந்தோஷச் சமாசாரம் வைத்திருக்கிறேன், உனக்கு?''

''என்ன?''

''நீ சொன்னால்தான் நான் சொல்லுவேன்.''

''நான் சொல்லுகிற சமாசாரம் ஒண்ணும் சந்தோஷ சமாசாரம் இல்லே.''

''பாதகமில்லே. சொல்லேன்.''

''வேண்டாம். நீங்க சொல்லுங்கோ...''

''நீ ரொம்ப அதிர்ஷ்டக்காரிடீ! என்னைத் திருச்சிக்கு வேலை மாற்றியிருக்கிறார்கள். பிரமோஷன் ஆயிடுத்து! சம்பளம் வேறே உயர்த்தியிருக்கிறார்கள்.''

வஸந்திக்கு அந்த மகிழ்ச்சியில் முகமெல்லாம் மலர்ந்து போயிற்று.

''உன் சமாசாரம் என்ன ஆச்சு?''

''அகல்யா இல்லே அகல்யா...காணுமாம் அவளை...''

''என்னது?''

''இரண்டு நாள் ஆயிடுத்தாம். யாரோ ஆபீஸ்லே வேலை பார்க்கிற வேறே ஜாதிப் பையனும், அவனோடே போயிட்டாளாம்.''

''அட ராமா!''

''அவனுக்குக் கல்யாணம் ஆகிக் குழந்தைகள்கூட இருக்காம். அவனோடே போயிட்டாளாம்!''

''எங்கே...?''

''சேலத்துக்கு.''

''யார் சொன்னா உனக்கு?''

''மாமி வந்து சொல்லி அழுதாள்!''

''என்னாது கஷ்டம்?..''

''சேலத்துக்கே போயாச்சு... சேலத்துக்கு மாற்றல் இந்தத் தடிச்சிதான் கேட்டு வாங்கியிருக்காள். நீங்க என்னவோ அதை 'கான்ஸல்' பண்ணிவிட்டீர்கள்...'' என்று குறும்புத்தனமாகச் சிரித்தாள்.

''லவ் பண்ணியிருக்கா...''

''இப்படித்தான் 'லவ்' பண்ணணுமா?'' இன்னும் ஒரு சமாசாரம் பாக்கி... மாமி வந்து இதைச் சொல்லுகிற போது, எனக்கு ஒரே வயிற்றுக் குமட்டல்....''

''என்ன?''

''எது சாப்பிட்டாலும் வயிற்றிலே தங்கறதில்லே. இரண்டு மாசம் ஆயிடுத்தோ இல்லையோ?....''

''அட, சொல்லவே யில்லையே, நீ?''

''கேளுங்கோ. மாமி விசாரிச்சா, எத்தனை மாசம்? இரண்டா மூணான்னு கேட்டா.''

''உம்...''

''நான் இரண்டுதான்னேன்.... மாமிக்கு இது மூணும் மாசமாம்!''

''என்னது?! மாமிக்கா?''

''ஊக்கும்... மாமிக்கு ஏழாவது பாப்பா பிறக்கப் போறது... பாவம். துக்கம் நெஞ்சை அடைக்கிறது. அவமானப்பட்டு, அவமானப்பட்டுக் கூனிக் குறுகிப் போனாள்... பாவம்!...''

''உனக்குமட்டும் பெருமையாகஇருக்கே?''

''உங்களுக்கு மட்டும் சந்தோஷமாக இல்லையா என்ன?''

பெருமை என்னை அணைத்துப் பூரித்துக் கொண்டிருந்தது!

# படித்துப் பாருங்கள்!

## கொங்கு நாட்டுக் கோயில்கள்

பதிப்புரை, முன்னுரை, சிறப்புரை, சிறப்புக் கவி, வாழ்த்துரை, அணிந்துரை, ஆசியுரை, மதிப்புரை, பாராட்டுரை, ''என் கருத்து'', நண்பருரை, நன்றியுரை இத்தனையையும் தாங்கி வரும் இந்நூல் எடுத்த எடுப்பிலேயே நம்மைப் பயமுறுத்தி விடுகிறது. ஒரு மாதிரி மனத்தைத் திடப் படுத்திக் கொண்டு மேலே பக்கங்களைப் புரட்டினால் கொங்கு நாட்டுக் கோயில்கள் பற்றியும் ஸ்தல வரலாறுகளையும் படித்து மகிழலாம்.

பேரூர் முன்பெல்லாம் அரச மரங்கள் அடர்ந்த காடாக இருந்தபடியால் பிப்பிலாரண்யம் என்று பெயர் பெற்றிருந்தது. ஆநிரை மேய்க்கும் இடையர்கள் பசு ஒன்று தினமும் ஓரிடத்தில் பால் சுரப்பதைப் பல நாட்கள் பார்த்து, ஒரு நாள் அதை தோண்டிப் புடைத்தனர். முடிந்த பகலில் குளம்பு பட்டு அங்கிருந்த லிங்கத்திலிருந்து இரத்தம் பீறிட்டது. அப்போதுதான் லிங்கத்தைக் கண்ட இடையர்கள் இவ்விஷயத்தை அரசரிடம் சொன்னார்கள். பிறகு இவ்விடத்தில் ஒரு கோயில் எழுந்தது.

இப்படி ஸ்தல புராணத்தைத் தெரிந்து வைத்துக் கொண்டால்தான் பாலாபிஷேகத்தைப் பார்க்கும்போது, வெள்ளியாலான பசுவை வைத்து அதன் மடி வழியாகத் திருமுடியில் பால் விழும்படி செய்வதன் தாத்பரியம் புரியும்.

இப்படியே பல கோயில்களின் ஸ்தல வரலாறுகளையும் இலக்கியத்தில் அந்த ஸ்தலங்கள் இடம் பெறும் அழகையும் படித்து ரசிக்கலாம் இந்நூலில். ஏராளமான புகைப் படங்கள் புத்தகத்தை அலங்கரிக்கின்றன.

ஆசிரியர் சிவ கவி மு. சுப்பையா; கிடைக்குமிடம்: தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம், 8, சின்னரெட்டித் தெரு, சென்னை — 8; விலை: ரூ. 6 - 00.

# வட்ட மேஜை

## அவமதிப்பதாகாதா?

ஸ்ரீ தியாகய்யர் 122வது வருட ஆராதனைக்குச் சென்றிருந்தேன்.

10—1—69 அன்று காலை நிகழ்ச்சியின் போது எல்லாருக்கும் ஒரு பாட்டு பாடத் தான் அனுமதி. இவைகளை ஒருவர் நிகழ்ச்சி நிரல்படி திட்டமிட்டு நடத்தி வந்தார். ஆனால் பாடியவர் இரண்டாவது பாட்டைப் பாடினார். மேற்பார்வையிடுபவர் பக்க வாத்தியக்காரர்களை எழுப்பிவிட்டு, ''நான் சொன்னால் கேட்க மாட்டீர்கள். இன்னும் பாட வேண்டியவர்கள் உள்ளார்கள்'' என்று கூற, அவர் அதையும் கேட்காது பக்கவாத்தியத் துணையின்றிப் பாடி முடித்தார். இது ரேடியோ ரிலேயும் ஆகிவிட்டது. இம்மாதிரி நிலைமையில் அகில இந்திய ரேடியோக்காரர்களும் ஒன்றும் செய்ய முடியவில்லை. ரசிகர்களுக்கு எப்படி இருக்கும்? ரேடியோ ரிலே என்பதால் எல்லோருக்கும் பாட வேண்டும் என்ற ஆசைதான். ஆனால் தியாகய்யர் உற்சவத்தில் நிகழும் இது போன்ற சம்பவங்கள் அவரை அவமதிப்பதாகவே ஆகும்.

ஆத்தூர்

13—1—69 ரா. வேங்கடராமன்

## முன்னேற்றமே!

திரு செம்மல் அவர்களின் 'வாழ்வு' என்ற கவிதையைப் படித்து உண்மைக் கவிதையின் உணர்வு பாவத்தை அனுபவித்தேன். எவ்வளவு அழகான அழுத்தமான வார்த்தைகள். தத்துவத்தையும் தார்மீகக் கருத்துக்களையும் மிக எளிய சொற்களில் எழுதி பிறை நிலவை முன்னிருத்தி காட்டியுள்ளார். கவிதையில் முன்னேற்றமில்லை என்பவர்கட்கு இது முன்னேற்றமே என்பதை உணர்த்தும்.

கரம்

23—1—69 கோவி. பரஞ்சோதி

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31

Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon